# வீரமாமுனிவர் வாகடத் திரட்டு



பதிப்பாசிரியர் :
எஸ். பி. ராமச்சந்திரன்

தொலைபேசி எண் : 420249

தாமரை நூலகம்
7, N.G.O. காலனி,
வடபழனி, சென்னை-600 026.

தாமரை வெளியீடு 127
முதல் பதிப்பு 1912
மறுபதிப்பு : ஜூலை 1994



## நூலைப் பற்றி

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | வீரமா முனிவர் வாகடத்திரட்டு |
| பதிப்பாசிரியர் | : | எஸ். பி. ராமச்சந்திரன் |
| வெளியிட்டோர் | : | தாமரை நூலகம்<br>7, என். ஜி. ஓ. காலனி<br>வடபழனி, சென்னை-600 026. |
| பதிப்பு ஆண்டு | : | ஜூலை 1994 |
| உரிமை | : | பதிப்பகத்திற்கு (மறுபதிப்பிற்கு மட்டும்) |
| நூல் வடிவம் | : | 18 செ.மீ. 12.5 செ.மீ. |
| அச்சுத்தாள் | : | 10.7 வெள்ளைத்தாள் |
| அட்டை | : | 13.8 சேஷாயி போர்டு |
| எழுத்துக்கள் | : | 10 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | 224 |
| பிரதிகள் | : | 1200 மட்டும் |
| பைண்டிங் | : | செக்ஷன் |
| **நூலின் விலை** | **:** | **ரூ. 30-00** |
| அச்சாளர் முகவரி | : | கார்த்திக் பிரிண்டர்ஸ்,<br>கோடம்பாக்கம், சென்னை-24 |

## தமிழ்நாடு ஆவணக்காப்பகம்

## எழும்பூர், சென்னை-8.

க. எண். 6454/ஆநூ/94 நாள்: 28.6.94

# அனுமதிக் கடிதம்

பொருள்: தமிழ்நாடு ஆவணக் காப்பக நூலகம்— வீரமாமுனிவர் வாகடத் திரட்டு—மறுபதிப்பு செய்தல்—அனுமதி வழங்கப்படுகிறது.

பழைய அரிய தமிழ் நூல்களைக் காப்பற்றி, மக்கள் படிக்க வகை செய்யும் வண்ணம், அரியதமிழ் நூல்கள் மறுபதிப்புச் செய்யும் திட்டம் ஒன்றினை தமிழக அரசு கல்வித்துறை அரசாணை (நிலை) எண். 372 (கல்வி) நாள் 20.4.'92ல் வெளியிட்டுள்ளது. அத்திட்டத்தின்படி 'வீரமாமுனிவர் வாகடத் திரட்டு' என்னும்நூலை மறுபதிப்பு செய்வதற்காகத் தாங்கள் செய்து கொண்ட மனு ஏற்றுக் கொள்ளப்பட்டு அனுமதி வழங்கப்படுகிறது.

மேலும், மறுபதிப்பு செய்யப்படும் இந்நூலில் தங்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கவும், அரசின் தமிழ் எழுத்துக் கொள்கை, பொது மக்கள் படிக்கவும், புரிந்து கொள்ளவும் வசதி ஏற்படுத்துதல் ஆகியவற்றைக் கருத்தில்

கொண்டும் கீழ்க்காணும் மாற்றங்களைச் செய்து கொள்ளத் தங்களுக்கு அனுமதி அளிக்கப்படுகிறது.

1. பாடல் எண்கள் மற்றும் பக்க எண்களுக்கு கொடுக்கப்பட்ட தமிழ் எழுத்துக்களுக்குப் பதிலாக இந்தோ அரபி எண்கள் கொடுத்தல்.

2. பழைய தமிழ் எழுத்துக்களுக்குப் பதிலாக சீர்த் திருத்த எழுத்துக்களைப் பயன்படுத்துதல்.

3. பொருள்களின் பழைய அளவைகளுக்கு இணை யான மெட்ரிக்அளவு அட்டவணையைச் சேர்த்துக் கொள்ளல்.

4. பொருளடக்க அட்டவணையில் பழைய பதிப்பில் உள்ள பக்க எண்களுக்குப் பதிலாகப் புதிய பதிப்பில் உள்ள பக்க எண்களை உபயோகித்துக் கொள்ளல்.

மேற்கண்ட அனுமதிக்கப்பட்ட மாறுதல்கள் தவிர பிற எம்மாறுதலையும் செய்யக்கூடாது என்பது தெரிவிக்கப் படுகிறது.

தங்கள் நம்பிக்கையுள்ள,

மு. பரமசிவம்
29-6-94

ஆணையர்.

பெறுநர்:
தாமரை நூலகம்
7, என்.ஜி.ஓ. காலனி,
வடபழனி, சென்னை-600 026.

# மறுபதிப்பின் முன்னுரை

வீரமாமுனிவர் வாகடத் திரட்டு என்னும் இந்நூல் அளவு கடந்த சிறப்பினை யுடையதாகும். இதை டாக்டர் ஹக்கீம் பா. மு. அப்துல்லா அவர்கள் பதிப்பித்துள்ளார்கள் என்பதே இதன் தனிச் சிறப்பை விளக்கும்.

அப்துல்லா அவர்கள் வீரமாமுனிவரின் பாடல்களுக்கு விரிவான விளக்கம் எழுதியதோடல்லாமல் ஒவ்வொரு மருந்துக்கும் அனுபவபூர்வமான செய்முறை விளக்கத்தை யும் எழுதியுள்ளார். அது எவ்வளவு அற்புதமாகப் பலன் அளிக்கிறது என்பதையும் மிகவும் பாராட்டி எழுதியிருக் கிறார்.

இத்தகைய அபூர்வமான நூல் வழக்கொழிந்து போகும் படிச் செய்யப்பட்டிருக்கிறது என்றால் இடைக் காலத்தில் தமிழகம் எத்தகைய துரதிர்ஷ்டத்திற்கு ஆளாக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும். அந்நிய ஆதிக்கத்தின் கீழ் அந்நிய மருத்துவத்திற்கு ஊக்கம் அளிக்கும் போக்கு மக்களிடையே செல்வாக்குப் பெற்றவர் களை விலைக்கு வாங்கி விட்டதன் காரணமாக—தண்ணீ ரும் காற்றும் தவிர—மற்ற எல்லாமே வெளிநாட்டுச் சரக்குகள் அல்லது முறைகள்தான் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்ற அளவுக்கு ஒருதலைப்பட்சமான சரிவு

தமிழகத்தில் ஏற்படச் செய்துவிட்டது என்பதை அறிய முடிகிறது.

ஆனால் இத்தாலி நாட்டில் பிறந்த ஒருவர் தமிழ் மருத்துவத்தைக் கற்று, அதன் பயனை அனுபவ பூர்வமாக உணர்ந்து—அதைச் சித்தர்கள் முறையில் அழகிய தமிழ்ப் பாடல்களாகப் புனைந்து வைத்தார் என்பது ஒன்றே தமிழ் மருத்துவத்தின் சிறப்புக்குச் சான்றாகும். அந்த இத்தாலி நாட்டவர் தமிழுக்குச் செய்துள்ள தொண்டினை நினைக்கும் பொழுது ஒவ்வொரு தமிழனும் பூரிப்படையலாம்.

வீரமாமுனிவர் என்ற பெயரில் வியத்தகு புகழ்பெற்ற அம்மேதை இத்தாலி நாட்டில் பிறந்தவர். இவரது இயற் பெயர் கான்ஸ்டாண்டின் ஜோஷப் பெஸ்கி 1700ம் ஆண்டு கிருஸ்தவ மதத் தொண்டு புரிவதற்காகத் தமிழகம் வந்தவர்.

மதத் தொண்டு புரியும் பாதிரிமார்கள் தாங்கள் குடியேறும் நாட்டிலுள்ள மக்கள் மொழியைக் கற்றும், நடை உடை பாவனைகள், நாகரிகம் முதலியவற்றை நன்குணர்ந்தும் அவர்களோடு ஒன்றிப் பழகுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இது ஒருவகையில் மேலை நாட்டவர்களின் ராஜதந்திரத்தின்பாற் பட்டதே எனினும், பெஸ்கி அவர்கள் தமிழில் ஈடுபாடு கொண்டு மேலும் மேலும் ஆழமாகக் கற்றுத் தமிழில் தேர்ச்சியடைய வேண்டும் என்ற எண்ணத்தால் மாம்பழக் கவிச்சிங்க நாவலர் என்று புகழ் பெற்றிருந்த சுப்ரதீபக் கவிராயரிடம் தமிழ் கற்றார்.

கவிச் சிங்கத்தின் கூட்டுறவு பெஸ்கியவர்களையும் ஒரு கவிஞராகவே மாற்றிவிட்டது. தமிழ்க்கவிதைகளில் ஊறி ஊறித் திளைத்த அவர் தாமே தேன் சொட்டும் கவிதைகளைப் பாடத் தொடங்கிவிட்டார். பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட அவர் பாடிய தீங்கனிப் பாடல்களைக் கொண்ட தேம்பாவணி என்னும் காப்பியம் உலகில் சிறந்த இலக்கியங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.

வீரமாமுனிவர் என்ற சிறப்புப் பெயர் பெற்ற பெஸ்கி அவர்கள் தமிழுக்குச் செய்த தொண்டு ஒரே வகைத்தன்று.

முதன் முதலாகத் தமிழில் எழுத்துச் சீர்திருத்தத்தைக் கொண்டு வந்தவர் அவர். அவர் காலத்திற்கு முன் எ, ஒ என்ற எழுத்துக்கள் நெடில்களாகக்கருதப்பட்டு அவற்றுக்கு மேலே புள்ளிகள் வைத்தால் குறில்கள் என்று கொள்ளப்பட்டிருந்தன.

அதேபோல் ெ அடையாளம் எகாரக் குறிலாகவும் மேலே புள்ளி வைத்தால் நெடிலாகவும் கொள்ளப்பட்டிருந்தது.

இதனால் ஏற்படும் குழப்பத்தையும் சிரமத்தையும் நன்குணர்ந்த வீரமாமுனிவர், எ, ஒ நெடிலுக்கான வரிவடிவங்களையும் உயிர்மெய் எகரக் குறிலுக்கு ெ ஒற்றைச் சுழியையும், உயிர்மெய் எகர நெடிலுக்கு—ே—மேலும் கீழும் இரண்டு சுழிகள் உள்ள எழுத்தையும் பயன்படுத்தும் முறையையும் உருவாக்கினார். இந்த எழுத்துச் சீர்திருத்தம் தமிழின் முன்னேற்றத்திற்கு எவ்வளவு உதவி செய்துள்ளது என்பது கூறாமலே விளங்கும்.

இரண்டாவதாக தமிழுக்கு முதன் முதலாக சதுரகராதி என்ற பெயரில் ஒரு அகராதியை உருவாக்கித் தந்தபெருமையும் வீரமாமுனிவர் அவர்களையே சாரும்.

மூன்றாவதாகத் தமிழில் முறையான உரைநடை அமைப்பையும் அதில் நகைச்சுவை மிளிரும் இன்பஊற்றான கதைச் செல்வத்தையும் தந்தவர் வீரமாமுனிவரே என்றும் கூறலாம். இவர் எழுதிய பரமார்த்த குருவின் கதையை அறியாதவர் யார்? பரமார்த்த குருவும் அவரது நான்கு சீடர்களும் புரிந்த லீலைகளை நினைத்து நினைத்துச் சிரியாதவரும் இருக்க முடியுமா?

எல்லாம் சரி.

வீரமாமுனிவர் தமிழுக்குச் செய்த தொண்டுகள் பற்றி அறிஞர்கள் அறிவர். ஆனால் அவர் மருத்துவ நூல்களை எழுதியுள்ளார் என்பது மட்டுமே மறக்கடிக்கப்பட்ட பொருளாகும். அப்துல்லா அவர்கள் வீரமா முனிவரின் நசகாண்ட வெண்பா, மகாவீரியச் சிந்தாமணி போன்ற நூல்களைப் பதிப்பிக்காதிருந்தால் இந்நூல்கள் அழிந்தே போயிருக்கும்.

இந்த நூல்களை மறுபதிப்புச் செய்யும் வாய்ப்புக் கிடைத்தமைக்காகத் தாமரை நூலகம் பெருமையடைகிறது. இவ்வாய்ப்பினை அளித்த ஆவணக் காப்பக ஆணையர் திருமிகு. மு. பரமசிவம் ஐ.ஏ.எஸ். அவர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

வணக்கம்.

எஸ். பி. ராமச்சந்திரன்

பதிப்பாசிரியர்

கடவுள் துணை

இராஜரிஷி
வீரமாமுனிவர்

# வாகடத் திரட்டும்

## தெளிபொருள் விளக்கவுரையும்

முதற்பாகம்

---

இஃது

யூநாநி வைத்திய
தாருட்யவிர்த்தி போதினி முதலிய
பல வைத்திய சாஸ்திர கிரந்தகர்த்தாவாகிய

ஹக்கீம்

**பா-முஹம்மது அப்துல்லா சாஹிபு**

அவர்களால்

சுதேச வைத்தியர்களின் உபயோகத்திற்காக

சென்னை

முஸ்லிம் அபிமானி அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

FIRST EDITION

1912 ஆண்டு



கை விலை : 1-00 வி. பி. ரூ. 1-20

# பழைய அளவுக்கு இணையான புதிய அளவுகள்

| பழைய அளவுகள் | புதிய இணையான அளவுகள் |
|---|---|
| பலம் | 35 கிராம் |
| விராகனடை | 4 கிராம் |
| குன்றி எடை | 130 மில்லிகிராம் |
| ரூபாய் எடை | 12 கிராம் |
| வீசை | 1 400 கிராம் |
| ஆழாக்கு | 170 மில்லி லிட்டர் |
| படி | 1334 மி.லிட்டர் |
| சாமம் | 3 மணிநேரம் |
| அங்குலம் | 2½ செ. மீட்டர் |
| உளுந்து எடை | 65 மில்லி கிராம் |
| இந்திராணி உப்பு | புங்கமரம் அல்லது நொச்சி மரம் சமூலத்தின் சாம்பலிலிருந்து எடுக்கும் உப்பு. ஆதாரம் T.V சாம்பசிவம் பிள்ளை அகராதி. |
| மரஉப்பு | மரத்தின் சமூலத்திலிருந்து எடுக்கும் உப்பு |
| பிராண்டிச் சாராயம் | பிராந்தி |

# வீரமாமுனிவர் வாகட த்திரட்டின் அட்டவணை

## அ



## இ



## உ



## க

பி



மா



மே



யோ



லி

## லோ



## வி



## வீ



## வெ



## ஜீ

கடவுள் துணை

# இராஜரிஷி வீரமாமுனி மகானுபாவர் அருளிச் செய்த வாகடத் திரட்டின்

# முகவுரை

கனவான்களே! இத்தலைப் பெயரமைந்த இந்நூலானது இராஜரிஷியும், மகாசாதுவும், ஆங்கிலம், தமிழ் முதலியவை களில் மிகவும் தேர்ச்சியுற்றுத் தமிழில் பல நூற்களியற்றிக் கீர்த்தி பெற்றவருமாகிய வீரமாமுனிவராற் செய்யப்பட்ட நசகாண்டம், நவரத்தினச் சுருக்கமாலை, மகா வீரியச் சிந்தாமணியென்னும் மூன்றினையும் ஒருங்குசேரத் திரட்டிய காரணத்தால் "வாகடத் திரட்டென்னும்" திருநாமம் பெற்று விளங்கும் பெருமை வாய்ந்தது.

இந்நூலாசிரியராகிய மேற்கண்ட வீரமாமுனிவரென் னும் மகானுபாவரின் அருமை பெருமைகளைத் தமிழ் பயின்ற பெருமக்களியாவரும் நன்குணர்ந்திருக்கலாம். இவர் பல்லாண்டுகட்கு முன்னர் உரோமாபுரியென்னும் உத்தமதலத்திற் பிறந்து, ஆங்கில முதலிய பாஷைகளில் அளவற்றுச் சிறந்து உண்மைகண்டு, உலகவாசைமுற்றுந் துறந்து, தமக்குடன்பாடாகிய கிறிஸ்துமதப் பெருங் குருத்துவம் பெற்று, கர்னல் பிஸ்கியென்னும் பெயருடன் உலாவிச் சின்னாட்களுக்குப் பின்னர் இந்திய நாட்டுட் புகுந்து பலவிடத்துஞ் சஞ்சரித்து இந்துமார்க்க முனிசிரேஷ் டர்களோடும் பெரியோர்களோடுமுறவாடி, இந்நாட்டு வழக்கங்களையுந் தெரிந்தனுசரித்து, முடிவில் இத்தமிழ் நாடடைந்து, இந்நாட்டுத் துறவியரோடு பெருநேசம்

கொண்டு, தம்மதக் கொள்கையைப் பலவிடங்களினும் பிரசங்கித்து, தமிழ்ப்பாஷையானது மிக்க அருமைவாய்ந்த தாகவும் மிகவும் நுட்பமான விஷயங்களடங்கிய பல நூல்களுடையதாகவுமிருப்பது தெரிந்து, இத்தமிழ்ப் பாஷையை மிக்க ஆவலுடன் கற்று, இதிலுள்ள ஐந்திலக் கணமுந் தெரிந்து, புராணேதிகாசங்கள், வைத்தியம், மாந்திரீகம், சோதிடம் முதலிய பலவகைப்பட்ட நூல் களையும் ஆராய்ந்து, தாம் தமிழ்ப்பாஷையிற் தேர்ச்சி யடைந்து, அதற்கறிகுறியாக இத்தமிழ் நாட்டுக்கொள்கை களையனுசரித்தே எண்ணிலாப் பெருமை வாய்ந்த சில பெரிய நூல்களையியற்றிப் பெரும்புகழ்படைத்த பெருந் தகையார். இவர் தமிழில் தமிழ்நாட்டாரினும் மிக்க தேர்ச்சி யுடையாரென்பதற்கு இவரியற்றிய "ஐந்திலக்கணத் தொன் னூல், தேம்பாவணி முதலிய அரிய பெரிய நூல்களே சான் றாம். இவர் வைத்தியத்திலும் மகாபாண்டிதத் தன்மை பெற் றுள்ளாரென்பதும் இவரியற்றிய நூல்களாகிய குணவாகடம் நிலக்கண்ணாடி, இதிலடங்கி யிருக்கின்ற நசகாண்டம், நவரத்தினச் சுருக்கமாலை, மகா வீரியச் சிந்தாமணி முதலியவைகளால் ஐயமின்றி விளங்கும்.

இவர் ஆங்கில வைத்தியத்திலும் மிக்க தேர்ச்சியுடைய ராதலின் தமக்கு மிகவும் பழக்கமாயுள்ள அந்த ஆங்கில வாகடவழியையும், இந்து வாகட வழியையும் நன்காராய்ந்து இரண்டின் வல்லபத்தாலும் தாமே பல அரிய விஷயங் களைச் சித்தாந்தப்படுத்தி, அவைகளை எல்லோருமுணர்ந் துய்யும் பொருட்டு இலகுவில் தெள்ளிய செந்தமிழால் சந்தேகமற வைத்திய நூல்களை யியற்றியபடியால், இவரியற்றியவைகளுள் இலக்கண விலக்கிய நூல்களைக் காட்டிலும் வைத்திய நூல்களையே எவரும் இனிமையாகக் கொண்டாடி அருமை பாராட்டி வருகின்றார்கள். இவரியற் றிய வைத்திய கிரந்தங்களனைத்தும் நந்தமிழ் நாட்டார்க்கு இன்றியமையாததாம். அவைகளியாவும் சித்தர் நூல்களைப் போன்ற மறைப்பு, பரிபாஷை, கடினம் முதலியவைகளுக்

குள்ளாகாது, பிற்காலத்து வழக்கத்தைத் தழுவிச் செய்வ தற்கு இலகுவான சந்தேகமற்றனவும், குணஞ் செய்வதிற் சிரேஷ்டம் பொருந்தியனவுமாகிய பல அரிய வாகடமுறை களமையப்பெற்றவைகளாகவும், எள்ளளவுஞ் சந்தேகத்திற் கிடங்கொடாத செந்தமிழ்ப் பாக்களா லமையப்பெற்றவை களாகவுமே விளங்குகின்றன. ஆயினும், உலகமுய்யும் பொருட்டு மெய்யன்பால் இந்த மகான் செய்த மேற்கண்ட நூல்கள் பெரும்பான்மையும் அச்சிட்டு வெளிவரவில்லை. இரண்டொன்றே அச்சிடப்பட்டு வெளிவந்து விளங்கு கின்றன. மற்றவை யனைத்தும் ஏட்டுச்சுவடிகளிலெழுதிக் கட்டிக் கபடமாக ஆங்காங்கே மறைக்கப்பட்டுக்கிடக் கின்றன. அவைகளுள்ளும் சில பெயரேயில்லாதபடி யடியோடழிந்தன.

உலகப் பிரயோசனமாகத் தோன்றிய இந்த மகானு டைய அருமைவாய்ந்த நூல்கள் இவ்வித நிலைமையடைந் திருப்பதைப் பற்றித் தமிழ் வாகடங்களிற் பிரியமுள்ள பல அரிய நண்பர்கள் பரிதாபமடைந்து அவைகளையெவ்வாறா யினுந் தேடிச் சேகரித்து அகப்பட்டவரையி லச்சிட்டு வெளிப்படுத்தி எவர்க்கு முதவுமாறு உலகினுக்குப் பேருதவி புரியும்வண்ணம் பல நாளாக எம்மை இடைவிடாது தூண்டி வந்தனர். எமக்கும் அவர்களுக்கேற்பட்டது போலவே பெரும் அவா ஏற்பட்டிருந்தது. இக்காரணம் பற்றிச் சில தினங்களுக்கு முன்னர் மேற்கண்ட நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டுமென்னும் பெருங்காரியத்திற் பிரவேசித்து அந்நூல்களைத் தேட ஆரம்பித்தபோது எமது பரம்பரையாரால் பண்டைக்காலத்தில் தேடிப் பாதுகாப்பில் வைத்திருந்த ஏட்டுச் சுவடித் தொகுதிகளில் குணவாகடம், நசகாண்டம், மகா வீரியச்சிந்தாமணி முதலிய சில நூல்கள் அதிர்ஷ்டவசத்தால் அகப்பட்டன. இதற்கனுகூலமாகச் சமையத்தில் ஓர் கிறிஸ்தவ நண்பர் நவரத்தின சுருக்க மாலை யென்னும் ஓர் அரிய நூலின் ஏட்டுச்சுவடியை உதவினார். பின் நசகாண்டம் அச்சிட்ட புத்தகமொன்று

கிடைத்தது. ஆகச் சேர்ந்த இவைகளைப் பரிசோதிக்குமள வில், நவரத்தினச் சுருக்கமாலை, மகா வீரியச்சிந்தாமணி ஆகிய இரண்டும் பூர்த்தி பெற்றவைகளாகவுமிருந்தன. நசகாண்டம் பூரணமாயிருந்தும் அச்சிட்ட புத்தகமானது பல அச்சு வழுக்கள் நிறைந்ததாகவும் பாட்டுக்கள் பலவாறு சிதைவுண்டதாகவும் முறைகேடாகிப் பார்ப்ப வர்க்குப் பயன்தரக் கூடாததாயிருந்தது. குணவாகடம் சற்று பூரணமற்றுக் குறைவுற்றிருந்தது. ஆனதுபற்றி தற் போது கிடைத்தவரையில் பூரணமாயிருப்பவைகளைமட்டும் வழுவின்றி யச்சிட்டு வெளிப்படுத்தலா மென்றும் மற்றவை களைப் பின்னே சீர்செய்து வெளிப்படுத்தலா மென்றுங் கருதிக் குறைவாயிருந்த குணவாகடத்தை நீக்கி மற்றவை களைக் கைக்கொண்டு நசகாண்டத்தை எமது ஏட்டுப் பிரதியிலிருந்தபடி ஒத்துப் பார்த்து வழுக்களைக் கூடிய வரையில் நீக்கிக் காப்பி செய்தும், நவரத்தினச் சுருக்க மாலை, மகா வீரியச் சிந்தாமணி ஆகிய இரண்டையும் சுத்தமான சுவடிகளிலிருந்தபடியே எழுதுவித்தும் ஆக மூன்று நூல்களையும் ஒருங்கு சேரத் திரட்டிப் பல புத்தி மான்களி னுதவியால் கூடியவரை பிழையறப் பரிசோதித்து மேலே காட்டிய வாகடத்திரட்டு என்னுந் திருநாமத்தோடு மேற்கண்ட மூன்று நூல்களிலுமுள்ள முறைகளை வசன ரூபமாகவும் எழுதி அதனதன் பின்னே சேர்த்து மிகவும் பிரயாசத்துடன் உலக நலத்தைக் கருதி ஆரம்பித்த சில தினங்களுக்குள்ளேயே அச்சிட்டு வெளிப்படுத்தினேம். இது இவ்வாறு விரைவில் முடிந்து வெளிப்படுதற்கு நமது அரிய நண்பர்கள் பலருஞ் செய்துவந்த தூண்டுதலும், எனது பேரவாவுமே காரணமாயின. இதனை அச்சிடுங் காரணமாக நமக்கு நேர்ந்த தேகசிரமம் பொருட்செலவு முதலிய வைகளோ மிகவும் அதிகம். இவ்விஷயம் ஒவ்வொரு வருக்குஞ் சொல்லாமலே விளங்கும்.

இதிலடங்கி யிருக்கின்ற மூன்று நூல்களும் மேற்படி வீரமாமுனிவர் செய்த வைத்திய நூல்களுள்ளே மிகவும்

உயர்ச்சி பெற்றவையென்பதும், எவர்க்கும் பிரயோசனப் படத்தக்கவை யென்பதும் இவைகளைப் பார்வையிடும் ஒவ்வொரு நண்பர்க்குஞ் சொல்லாமலே தெள்ளிதில் விளங்கும்.

இவைகளுள் நசகாண்டம், நூறும் நேரிசை வெண்பாக் களாலும், மகா வீரியச் சிந்தாமணி எழுநூறும் நேரிசை வெண்பாக்களாலும், நவரத்தினச் சுருக்க மாலை பத்தும் எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தங்களாலும் அமைக்கப் பெற்றிருக்கின்றன.

அப்பாடல்களோ சொன்னயம், பொருணயம், தொடை நயம் முதலியவைகளாற் சிறந்து பார்ப்பவர்கள் மனதை அப்பொழுதே கவரத்தக்க சுவை வாய்ந்தவைகளாய்ப் பரிபாஷை முதலிய முரண்பாடின்றி வெள்ளை நடையாய் உள்ளவற்றை உள்ளபடியே உணர்த்தும் செவ்வி வாய்ந்து அம்மகானது தமிழ்க் கல்வித் திறத்தைச் சந்தேகமற உணர்த்துதற் கேதுவாயிருக்கின்றன. இப்பாடல்கள் மற்ற போலிக் கிரந்தங்களிலுள்ள செய்யுட்களைப் போன்று செய்யுளிலக்கணத்திற்கு மாறாய்ச் சிதைவுண்டு பாட்டினது ரூபமேயின்றிப் பல சந்தேகங்களுக்கிடனாய்ப் பொருள் மாறுபட்டுப் புன்மைப்படும் இயற்கை வாய்ந்தவைகளல்ல.

இந்நூல்களி லடங்கியிருக்கு முறைகளோ ஒவ்வொரு வரும் மெச்சிக்கொண்டாடத் தக்க உயர்ச்சி பெற்றவை களும், பல ஆயிர முறைகளிலிருந்து தேர்ந்தெடுக்கப் பட்டவைகளுமாம். தேகத்தில் தாதுவிருத்தி, இரத்தபுஷ்டி முதலியவைக ளதிகரித்து நோயற்றிருக்கும் வாழ்வை விரும்பும் ஒவ்வொருவருக்கும் இம்முறைகள் இன்றி யமையாதவைகளாம்.

இந்நூல்களுள், நசகாண்டத்தில், மாந்தக் கஷாயம், உதிரவாயுக் குடிநீர், விக்கல்சத்திச் சூரணம், அஷ்டபாகச் சூரணம், மேகாதிச் சூரணம், சிந்தாமணிக் குளிகை, திரிகடுகுக் குளிகை, சன்னி வாதக் குளிகை, சித்தர் குளிகை, மத்தியானக் குளிகை, கருங்குழம்பு, பலாண்டக்

களிம்பு, கலிக்கம், பாரியாள்நேசம், தாதுபுஷ்டி யுசிதம், இளநீர்க் கிருதம், வெள்ளை யெண்ணெய், குண்டலாதித் தைலம், வெள்வங்க பற்பம், தாளக பற்பம், நவச்சார பற்பம், பவழபற்பம், நாகச் செந்தூரம், அக்கினி குமார செந்தூரம், அயக்காந்த செந்தூரம், மால்தேவிச் செந்தூரம், முதலிய பல முறைகளும்.

மகாவீரியச் சிந்தாமணியில், நவச்சாரக் கட்டுச் நவச்சார மெழுக்கு, கெந்தகத் தைலம், பாஷாண மெழுக்கு முதலிய முறைகளும்:

மகாவீரியச் சிந்தாமணியில், சுகாதாரமனோவாரம், ஜீவாமிர்தலாடு, யோகராஜ கோகிலம், இரசிதாமிர்த சஞ்சீவி, பிரமேக பைரவி, காமாக்கினி ஜீவரசம், மேற் பூச்சுத்திலா, பிரதாப லிங்காமிர்தம், மகாமேகாமிர்தம், விருத்த கௌமார சஞ்சீவி, பராக்கிரம சஞ்சீவி, மகா வீரிய லிங்க பஸ்பம், மகா வீரிய லிங்கசெந்தூரம், மகா வீரிய லிங் மெழுக்கு, வீரிய விருத்தி லேகியம், வீரியத்திலா, தாளகப் பற்பங்கள், இலிங்க செந்தூரம், ஜீவாமிர்த லிங்க பற்பம், விருத்தகௌமார சிவகாமீ பற்பம், சர்வரோக சஞ்சீவி பற்பம், துஷ்டரோக சண்டப் பிரசண்ட மாத்திரை, அம்பர்மாத்திரை, இராஜ தம்பன மாத்திரை, தாளக பற்பம், சஞ்சீவி லோக செந்தூரம், வீரசூர லிங்க செந்தூரம், நிராசை நிவாரண திலா, நிராசை நிவாரண நெய், சஞ்சீவி சூத பற்பம், மகாவீரிய பாலரசாமிர்தம், தாம்பிர பற்பம் வெள்ளைப் பற்பம், லோக வீரியாமிர்தம், மகாவீரிய லிங்க செந்தூரம், அப்பிரக பற்பம், வெள்வங்க பற்பம், சுவர்ண அப்பிரேகம், வெள்வங்க பற்பம், இலகுபாஷாண பற்பம், தாரபற்பம், வெள்ளிப் பற்பங்கள், இலிங்க செந்தூரம், கிருஷ்ண அப்பிரேக செந்தூரம் ஆகிய தாதுவிருத்தி முதலியவைகளுக்கு இன்றியமையாத பல முறைகளும் அடங்கியிருக்கின்றன. இம்முறைகளை வசன ரூபமாக எழுதிச் சேர்க்கப்பட்டிருப்பவைகளில் உட்பிரிவாகப் பல அரிய முறைகளுஞ் சேர்த்தெழுதப்பட்டிருக்கின்றன.

இந்நூலினது பெருமையானது இதிலுள்ள முறைகளைச் செய்தனுபவிப்பவர்களுக்குத் தானே விளங்கும். இது வைத்தியர், வைத்தியரல்லாதவர் முதலிய பலருக்கும் மிக்க பிரயோசனமைதரத்தக்கது. முரணான பலவைத்தியக் கிரந்தங்களை வாங்கி வாசித்துப் பயனின்றி மனம் வருந்து வதைக் காட்டிலும் இந்த ஒரு நூலை மட்டும் வாங்கிப் பார்த்தால், பார்த்தமட்டில் பலனடைவது திண்ணம். உலக நலத்தைக் கருதியே இது விஷயத்தில் நாம் எடுத்துக் கொண்ட அரும்பெரும் பிரயாசை முதலியவற்றை எதிர் நோக்காது இதற்கு மிகவும் குறைந்த விலையே யேற் படுத்தியிருக்கின்றோம். ஆதலின் நமது நண்பர்களியாவரும் இதற்குமுன் நாம் அச்சிட்டு வெளிப்படுத்திய பல கிரந்தங் களையும் பெருமை பாராட்டி வாங்கி நம்மைப் பல விதத் தாலுங் கனப்படுத்தி வருவதுபோலவே எல்லா நூல்களினும் அருமை வாய்ந்ததாகிய இந்நூலையும் வாங்கி எமக்கு மேலும் மேலும் இவ்வித வேலைகளைச் செய்வதற்கா மூக்கத்தையும் கனத்தையும் உண்டாக்குமாறு வேண்டு கின்றேன்.

இதனை அச்சிடுங் காலத்துடனிருந்துதவி புரிந்த பல அரிய நேயர்கட்கும், ஏட்டுபபிரதி முதலியனவுதவிய நண்பர்கட்கும் மனப்பூர்வமாக எப்பொழுதும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக் கின்றேன்.

இப்போது இந்த மூன்று நூல்களையும் வெளிப் படுத்தினது போலவே இமைதமகானால் செய்த மற்ற நூல் களையுமச்சிட்டு வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கின்றேன். ஆதலின், அம்மகானால் செய்யப்பட்ட இன்னும் வேறு பிரதிகளுள்ளார் தயவுடன் வோகோபகாரமாக எமக்கு அனுப்புவாரேயாயின், அத்தகையார் பெயருடன் அவற்றை அச்சிட்டு வெளிப்படுத்தி என்றும் நன்றி பாராட்டுவேன். சுபம்.

அக்கீம்-பா-மு-அ

முகவுரை முற்றுப் பெற்றது.

கடவுள் துணை

இராஜரிஷி வீரமாமுனி மகானுபாவர்
அருளிச்செய்த

# நசகாண்டம்

## வெண்பா 100

## மூலம்

### காப்பு

திசைமேவுந் தென்கிரியிற் சேருமுனி நூலாய்ந்து
நசகாண்ட மென்று நவில-அசைவில்
உருவில்லா னொன்றா னொருபொருளான் பூவோர்க்
கருள்வான் பதங்காப்ப தாம். 1

### அவையடக்கம்

பண்ணுற்ற விந்நூல் படித்துணர்ந்த வர்க்காமே
புண்ணுறுகைக் கண்ணாடி போலவே-யெண்ணுற்ற
சிற்றறிவோ ராருந் திறமறிய வேசொன்னேன்
கற்றறிந்தோர் தள்ளக் கடன். 2

### நூற்றிறம்

தாதறிந்தோ னாகிற் றனைப்பயந்த தாயாக
மாதாவென் றெண்ணி மகிழுவார்-வேதநெறி
பத்திக்கு மாதிப் பரனைப் பணிவோர்க்குச்
சித்திக்கு மிந்நூற் றிறம். 3

### 1. மாந்தக் கஷாயம்

வேளைவேர் சுக்குடனே வெந்தயமும் வெள்ளுள்ளி
பாளை வசம்பு பகரோமம்-வேல்விழியே
ஒன்றாகக் கூட்டி யுடன்குழந்தைக் கீயக்
கண்டவுடன் மாந்தம்போங் காண். 4

## 2. உதிரவாயுக் குடிநீர்

தானென்னும் வெள்ளுள்ளி தப்பா தடுப்பேற்றி
வேனென்னு மக்கினியில் வேகவைத்து-ஏனென்னும்
இஞ்சி யுடன்சேர்த் தெரித்தந்த நீர்குடிக்க
மிஞ்சுதிர வாய்வில்லை மேல். 5

## 3. வீக்கல்சத்திச் சூரணம்

பண்ணும் பருத்திவிளாப் பாரிலுள்ள நெற்பொரியும்
எண்ணுசிறு திப்பிலியு மேலமுடன்-நண்ணுபொடி
சர்க்கரையுந் தேனுந் தளரக் குழைத்துண்ண
விக்கல்சத்தி போகும் விரும்பு. 6

## 4. அஷ்டபாகச் சூரணம்

செப்புபறங் சிப்பட்டை செய்யகருஞ் சீரகமும்
திப்பிலிசீ னாக்காரஞ் சேர்பலமுந்-தப்பில்லாச்
சங்கின்வேர் சந்தனமுஞ் சாருநில வாவாரை
செங்கத்தா ரிப்பட்டை தேடு. 7

தேடியதோர் பட்டையுடன் தேறுமுடக் கொற்றான்வேர்
பாடிடுமொவ் வொன்றரையாய்ப் பாவித்து-நாடியெடு
சூரணத்தைச் சர்க்கரையிற் றூயகணக்காயுண்ணுங்
காரணங்கால் மண்டலமுங் காண். 8

காணுங் கிரந்தி கணக்காம் பதினெட்டும்
பானமில்லாக் குஷ்டம் பதினெட்டும்-மோனமில்லா
மேகந்தொண் ணூற்றாறு மேவியிடம் விட்டகலும்
பாகமிகு பத்தியமாம் பார். 9

## 5. மேகாதிச் சூரணம்

வெள்ளறுகு சங்கினது வேர்முத்தக் காசுகஞ்சா
வள்ளன்முடக் கொற்றான் வளர்குறிஞ்சா-தெள்ளும்
நவக்கரிச லாங்கண்ணி நண்ணியச மூலஞ்
சிவனாரின் வேம்பதுவுஞ் சேர். 10

சேர்த்திடித்த சூரணத்தாற் றேன்மொழியே கேளுடலைக்
கார்த்திடித்த மேகவெள்ளை கையெரிவு-மாற்றமில்லா
மேகமொடு சூலை மேவும் வெடிசூலை
போகுமே யெவ்விஷமும் போற்று. 11

## 6. சிந்தாமணிச் சூரணம்

சிந்தா மணிக்குளிகை செய்முறைகேள் நாகம்லிங்கம்
கெந்தியரி தாரங் கெடிநாவி-முந்தும்
திரிபாலை காரந் திரிகடுகுந் தானே
அரியவக்கி ராகார மாம். 12

ஆன பதின்மூன்று மாயிழையே யோர்நிறையாய்
மானமிகு மித்தொகைக்கு வாளமிடு-ஈனமில்லாத்
தேன்கரும்பின் சாற்றிற் றினமிரண்டி லாட்டியுண்டை
கான்சேர் சிறுபயறு காண். 13

கண்டுசெய்த வுண்டைதனைக் கையானின் சாற்றிலிடு
நன்றாம் விரோசனமா நங்கையரே-தின்றாலோ
மோரிற் கிராணிக்கா முன்னுபழச் சாற்றில்விடம்
சாரும்வெலத் திற்போகுந் தான். 14

தாகம்போம் பித்தமறச் சர்க்கரையாஞ் சீனியிற்கொள்
சாகமிகுந் தீபனமாந் தக்காளி-தாக
மருவுமற்ற நோய்களுக்கு வல்லாரைச் சாறாம்
திரிசுரங்க ளுக்காகுந்தேன். 15

தேனேகுன்மந் தனக்குத் தேர்முருங்கைச்சாறுடனே
பானேருங் கோமயத்திற் பாய்ச்சிவிடு-வானுதலே
நீர்மலக்கட் டுக்கு நிறைந்தபுளி நீரிற்கொள்
ஊர்புளியி லுட்டணம்போ முண். 16

உண்ணுமே குன்றிமணி யோங்குமிலைச் சாற்றிற்
சன்னிவா தச்சுரங்கள் சாராது-கன்னியரே
நாடுபடர் தாமரையும் நண்ணாம லோடிவிடும்
தேடியிஞ்சிச் சாற்றிலுண் டை சேர். 17

உண்டையிடு காடிதனி லோடுமண்ட வாதமெல்லாம்
பண்டுவாய் நாற்றமறும் பாரதனில்-கொண்டுபார்
பல்லுவலி கட்கெல்லாம் பாரிரண்டு காசிடையில்
நல்லெண்ணெ யிற்கொடுத்து நண். 18

## 7. திரிகடுகுக் குளிகை

திரிகடுகு நற்குளிகை செப்பக்கேள் கெந்தி
அரிதார மக்கிரார மாகும்-நெரிவிஷமும்
நாவி திரிகடுகு நல்லரசம் நேர்வாளம்
சீவுங் கடுக்காயுஞ் சேர். 19

கடுக்காயு மிந்துப்புங் காணுந்தான் றிக்காய்
நெடுகடுகு ரோகணியு நேரே-அடைவாக்
குதிரைக் குளம்போடு கூடுபதி னைந்து
மதியாக வோர்நிறையாய் வாங்கு. 20

வாங்கி நன்றாய்ச் சுத்திசெய்து வாகுடனேகையான்சா
றேங்குவதேன் கல்வத்தி லேழுதினம்-ஓங்கியரை
குன்றிபோ லுண்டைசெய்து கூட்டி நிழலுலர்த்திக்
கொண்டவனு பானமதிற் கொள். 21

கொள்ளும் பழச்சாற்றிற் கோடான கோடிவிஷம்
தள்ளுண்டு போகுங்காண் தையலே-தெள்ளுஞ்
சிறுகருப்பஞ் சாறுதனிற் சேர்த்துநீ யூட்டு
முறைவேக நஞ்சு முறியும். 22

முறியும்நெல்லிச் சாற்றின் முகக்கடுப்பு சன்னி
மரியுஞ் சைத்தியசுர வாதம்-இரியுமே
மேதித் தயிரிலிட மேவுமதி சாரமும்போம்
போதமிகு வேம்புசுரம் போம். 23

போகுமே சர்க்கரையுஞ் சீரகமும் போற்றியிடு
சாகுமெட்டுக் குன்மவகை சாராது-தோகையரே
முள்ளிப்பழத்திலுண்டை முன்னி வைத்துக்கையிலிடப்
பில்லியொடு சூனியம்போம் பேய். 24

பேய்போஞ் சிறுநீரிற் பேர்த்திழைத்துக் கண்ணிலிட
வாய்ந்தசன்னி வாதமும்போ மங்கையரே-காய்ந்த
சிறங்கைபுளிப் பட்டைச் சிறுசாம்பல் நீரில்
பறங்கிப்புண் போகுமே பார். 25

பார்த்துச்செய் யிம்மருந்தைப் பாவிகட்கு விள்ளாதே
கூர்த்தமருஞ் சிற்றறிவால் கூறிவிட்டேன்- ஆர்த்ததிது
வேறெக் குளிகையொன்றும் வேண்டாமிதைச்செய்து
மீறுங்காண் வைத்தியர்கை வேல். 26

## 8. சன்னிவாதக் குளிகை

இந்துப்பு கெந்தியுட னேற்றதொரு வெண்காரம்
உந்து திரிகடுகு மோர்கழஞ்சு-பந்தமிகு
வாளமதோ ரண்டு வளர்கடுகு ரோகணியும்
சாலமிகு நான்காகுந்தான். 27

ஆன சரக்கிவற்றை யம்மிதனி லேயுகந்து
ஈனமில் லாப்பழச்சாற் றிட்டரைப்பாய்-ஊனமிலா
நல்லுளுந்து தன்னளவாய் நல்கியதோருண்டைதனை
வெல்லுமிஞ்சிச் சாற்றிலிடு மின். 28

மின்னனையாய் தீரும் வியாதிதனைக் கேளணங்கே
அன்னமே யெச்சுரமு மண்டாதே-மண்ணின்மிசை
தோஷமொடு ஜன்னி சூதான வாய்வனைத்தும்
பாசமறப் போமே பறந்து. 29

## 9. சித்தர் குளிகை

சித்திரஞ்சேர் மூலமதோ சீராக் கழஞ்சியொன்று
அத்திறஞ்சேர்பூர மதுகழஞ்சு-சத்தியங்கேள்
ஓம மொருகழஞ்சி யோதுபனை வெல்லமொடு
சாமம்ரண்டு சார்ந்தரைப்பாய் தான். 30

அரைத்து மிளகளவா யாக்கியே யுண்டை
தரையிலே பத்துநாள் தானுண்-நிரைகுழலே
ஓதுமிர ணங்கிரந்தி யோர்யோனிப் புற்றுடனே
காதவழி யோடிவிடுங் காண். 31

மாறுமே சூலை வரட்கள்ளிப் பூக்கிரந்தி
நீறும்லிங்கப் புற்று நிறைபவுத்திரந்-தேறாத
கன்னப் பிளவைபக்கங் காணும் படுபிளவை
உன்மார்ச் சிலந்தி யோடும். 32

ஓடுமே விப்புருதி யோதுகின்ற குன்மமெட்டும்
நாடுதனில் மேகரணம் நாடாது-மாடுகளே
காட்டதனில் மூலிகையைக் காணாம லேயலைவீர்
வீட்டிலிருந் திம்முறைசெய் மின். 33

## 10. மத்தியானக் குளிகை

நாதமொடு லிங்கம் நவிலுவேன் காரமுடன்
சீதச் சிலையினொடு திப்பிலியும்-பேதமில்லா
தேனாஞ் சுவர்னப்பால் சேர்த்தரைத்தேயுண்டைகொள்
போன வுயிர்திரும்பும் போற்று. 34

திருவிஞ்சிச் சாற்றிற் றீருஞ் சுரங்கள்
விரும்புபழச் சாற்றால் விஷம்போம்-தெரிவையரே
தின்றாலோ வாந்தி விக்கல் தேனிலே சன்னிபித்தம்
நன்றாகுங் குன்மநெய்யில் நாடு. 35

குன்மம்போ மேகவகை சூர்பிரம்பின் வேர்ப்பொடியும்
உன்னு சருக்கரையு மூட்டியே-தின்னப்
படுபிளவை மேகம் பறங்கிப்புண் சூலைக்
கிடுமிளகுந் தூள்வெல்ல மெண். 36

வெல்லமொடு சுக்கு மிகுமிளகு வாய்விளங்கம்
வல்லநில வாவாரை வாய்ந்திடித்துச்-சொல்லக்கேள்
உண்டை பொடிசேர்த் துண்ணவே யெப்போதும்
அண்டமுறுஞ் சூலையறு மால். 37

மாலான முத்தம் வளரிஞ்சி பூவரசு
மேலாங் கடுக்காய் விளங்கமுடன்-சீலமிகும்
வெந்நீரி லேயரைத்து மேவுசுர சத்திவிட
அண்ணுகா மாலை யறும். 38

வாறுகேள் சங்கு வளரு மூடக்கொற்றான்
கூறுகேள் வெள்ளறுகு கோரையுடன்-வீறுகேள்
சார்ந்த குடிநீரிற் சாத்தியஞ்சேர் மேகமெலாங்
கூர்ந்தோடுஞ் சண்டையிட்டுங் கொண்டு. 39

நீலியொடு நாயுருவி நீர்முள்ளி சங்குடனே
சீலமுட னற்குடிநீர் செய்துகேள்-காலையிலே
உண்டையிட்டுக் கொள்ள வுள்மூல மோடும்
கண்டிதமாய் மாலையிலுங் காண். 40

காரையொடு நெல்லி கருங்காலி நல்வேலி
பாரையுறுஞ் சொற்கப்பா லாலரைத்துத்-தேரவே
ஊனுங் குளிகைதனை யுட்கொள்ளு நீநிதமும்
பூணுஞ் சயரோகம் போம். 41

காணுகின்ற காந்திகழல் வேல்மிள குள்ளி
பூண வரைத்துப் புசியுண்டை-தோணுஞ்
சுழல்வாதங் கண்டவர்தஞ் சொந்தவாய் வெல்லாம்
விழலாகு மேநீ விரும்பு. 42

## 11. கருங் குழம்பு

கட்டாக வின்னங் கழறுகிறேன் வல்லத்துக்
கிட்டமொடு -ாந்தங் கிருபையாய்-நட்டமில்லா
நீரடியின் முத்து நிறையாய்க் கழஞ்சுமொன்று
நேர்வாளம் ரண்டாகு நேர். 43

நேர்ந்திந்த நாற்சரக்கை நேரிழையே சுத்திசெய்து
போந்தநிறை கல்வத்திற் போட்டரைப்பாய்-ஆர்ந்தவெரு
மேதைச் சிமிழில்வைத்து வேண்டிப்பணவெடைதான்
பாதைப் பனைவெலத்திற் பாய்ச்சு. 44

வெல்லமதி லுண்டிடப்பார் மெல்லியர்கள் சூதகமும்
அல்லலுறுங் கட்டிநீ ராமையுடன்-சொல்லக்கேள்
காணு மகோதரமுங் காமாலை காய்ச்சல்கட்டி
பூணும் பலவாய்வும் போம். 45

## 12. பலாண்டக் களிம்பு

பச்சைக் களிம்பொன்று பாடுகிறேன் பங்காளப்
பச்சைகுங்கிலி யத்தோடு பாரிரசம்-நிச்சயங்கேள்
ஊமத் திலைச்சாற்றி லொக்க வரைதடுத்து
ஆமிதனை யேகலத்தி லப்பு. 46

அப்புங் கலத்துளதை யானபசு வெண்ணெயிட்டுத்
தப்பாதே செம்புகொண்டு தானிழைப்பாய்-அப்பாகேள்
புற்றுங் கிரந்திகட்கும் பொல்லாத புண்புரைக்கும்
வெற்றிலை யிற் பூசிவிடு வேண்டி. 47

## 16. கலிக்கம்

பெருங்காயம் புங்கின்வித்து பேய்வித்து காரம்
நருக்கு மிளகுசுக்கு நண்ண-வொருநிறையாய்
மேனியினற் சாற்றின் மிகவரைநீ சாமம்ரண்டு
பேணியுண்டை செய்துகொள்வாய் பின். 48

கேள்சன்னி பற்கிட்டுங் கேளாத் தலைவலியும்
கோள்செய் பிடரிக் கொடுங்கனப்பும்-வாளான
மெல்லியர்தன் பாலிழைத்து மேவியிடு கண்ணினுக்கு
அல்லலற்றுப் போமென் றறி. 49

## 14. பாரியாள் நேசம்

இச்சியதின் பாலை யியல்பாக வாங்கிக்கேள்
பக்ஷமுடன் பாக்கில் பரிந்தூட்டி-நிச்சயங்கேள்
கையில்வைத்துக் கொண்டு கருங்குழலா ளுக்கீய
மெய்யில்வைத்த நேசம்விடாள் மேவு. 50

## 15. தாதுபுஷ்டி யுசிதம்

பாங்காக் குறஞ்சானின் பத்திரியைக் காலைதனில்
தேங்காய்ப்பா லிற்றேய்த்துத் தின்னவே-சாங்கமற
மாதர் தமைக்கூட மனமுண்டாம் நாடோறும்
தாதுபுஷ்டி யுண்டாகுந் தான். 51

## 16. இளநீர்க் கிருதம்

நல்லிளநீர் நாலிரண்டு நாடியதோல் சீவிக்கேள்
தெள்ளுமொரு நான்குநாட் சேற்றினுள்வை-பிள்ளாய்கேள்
பின்பந்த நீரெடுத்துப் பேசுமிலவங்கம்
பன்கோஷ்ட மாமதுரம் பார். 52

மதுரமொடு கந்தமிகும் வாரிலுப்பைப் பூவுஞ்
சதுரமிகு சந்தனமுந் தானே-யிதமுடைய
முந்திரிகை யின்பழமும் மோகமுறு கற்கண்டும்
அந்தமிகு சர்க்கரையு மாம். 53

ஆகுமிவை யொன்றா யரைப்பாய்தண் ணீர்கலந்து
பாகுமிகு நெய்காற் படியிட்டு-வேகவைத்துக்
கொண்டுபார் நீரிழிவு கொள்கடுப்பு வெள்ளைவெட்டை
சண்டையிட்டுக் கொண்டோடுந் தான். 54

## 17. வெள்ளை யெண்ணெய்

அறையக்கே ளெள்ளெண்ணெ யானைரசந் தோடை
நிறையொன்றாய் நீயெரித்து வாங்கி-யுறைகரண்டி
கொண்டு பார்வெள்ளை வெட்டை கூறியதோ ரஸ்திரணம்
பண்டையிடம் போய்ப்பதுங்கும பார். 55

## 18. குண்டலாதித் தைலம்

குண்டலா தித்தைலங் கூறுகிறேன் சங்கின்வேர்
பண்டழிஞ்சிப் பட்டை பறங்கியதுங்-கண்டிதஞ்சேர்
வில்வமமுக் குராவேர் வேண்டுபலம் பத்து
வல்லவிடி தூணிசலம் வார். 56

தூணிசலமெட்டோன்றாத் தோகையரே காய்ச்சிப்பின்
வேணுமுன்போ லெள்ளெண்ணெய் மேவவிடு-காண
வெடுபசுவின் பால்பலமூன் றேசர்க் கரையும்
முடுகரத்தை ரோகணியும் முன். 57

காணும் வலம்புரிக்காய் கைகண்ட சந்தனமும்
பூணும்பூ சுப்பத்திரி பூலாவேர்-வேணும்
செப்பு மிளகத்தித் திப்பிலியு மானேகேள்
அப்பலங்கா ணாலரைக்கா லாய். 58

தானச் சரக்குகளைத் தன்மையுட னாட்டியெண்ணெய்
பான மதிற்கலந்து பாச்சடுப்பில்-தேனே
மெழுகுபதம் பார்த்து மெள்ள வடித்துப்
பழுதறவே நீமுழுகிப் பார். 59

முழுகு மிலுப்பையதின் முற்றற்புண் ணாக்கில்
கொழுகுன்மம் வாதசன்னி குஷ்டம்-பழுதுசெய்யும்
பீனிசங்க ளுஞ்செவிடும் பேசாத காதிரைச்சல்
பூநிலத்திற் கண்மறைவும் போம். 60

போமேக சூலை புகல்கான் முடக்கதுவும்
வாம சருவாங்க வாதமுந்தான்-பூமீதில்
சென்னிதனி லுண்டான தீராத நோய்களெல்லா
மெண்ணெயைக் கண் டாலோடு மேற்று. 61

## 19. வெள்வங்க பற்பம்

பார்சிறந்த சம்புவின்வேர் பண்பா யதையரைத்து
நேர்ந்திடுவெள் வங்கத்தை நீபொதிவாய்-சேர்ந்ததனை
ஓடுங்கீழ்மேலுமிட்டே யொண்டொடியேயெண்பதெரு
போடுபுட மாறியெடு போது. 62

ஆறியெடு பற்பமதா மாரிழையே நெய்தேனில்
மாறிப் பண வெடையுண் மண்டலங்கால்-வீறான
மேக மதிசாரம் வேகுமஸ்தி வெட்டைபித்தம்
போகுமிகு விந்துண்டாம் போற்று. 63

## 20. தாளக பற்பம்

பொய்யல்ல சத்தியமாய்ப் பொற்கொடியே பேசுகிறேன்
மெய்யாச்சோ தித்து மிகப்பார்நீ-ஐயமில்லை

தாளகத்தை வாங்கி த்தயவாகச் சுண்ணாம்பில்
நாளகத்தி லேபொதிந்து நண். 64

நாளதுதா னொன்றுசென்றா னல்லசுத்தி நீயெடுத்துத்
தாளியதின் சாறுதனிற் றான்போடு-ஊளையற
ஊறிநாள் மூன்றானா லொக்க வெடுத்துலர்த்தித்
தேறியமுன் சாற்றிலரை தேர்ந்து. 65

அரைத்ததொரு வில்லைதனை யன்பா யுலர்த்தி
நிரைதருமண் ணோட்டிட்டு நிற்கப்-பரையுரைத்த
பத்தெருவி லோர்புடஞ்செய் பற்பமதாங் கண்டீர்
மெத்தசய ரோகம்போம் மின். 66

## 21. நவச்சார பற்பம்

தீநீருஞ் சாரத்தின் சீரான பற்பங்கேள்
பூநீரு வேணமட்டும் போர்ந்துகொணன்-னீராலே
துப்பாத் தெளிவிறுத்துச் சூடாக வேயெரிக்க
வுப்பாகும் பின்னே ளுகந்து. 67

உகந்தே யிவற்றினுட ணுண்ணுகறி யுப்பும்
உகந்தருகல் லுப்பும்வெடி யுப்பும்-பகர்ந்த
இவையொவ் வொருகழஞ்சா யேற்றகல்வத் திட்டு
நவச்சார மோரிரண்டாய் நாட்டு. 68

நாட்டிப் பழச்சாற்றால் நாற்சாமம் நீயுகந்து
ஆட்டிவில்லை காயவைப்பா யன்பாகத்-தேட்டமுற
ஓடுதனின் மூடிமண்செய் யொக்க முழப்புடமாய்ப்
போடவே பற்பமதாம் பூண். 69

பூணுமிந்தப் பற்பமதைப் போற்றி மறுபடியும்
தோணப் பழச்சாற்றாற் றோகையரே-நாணமற
இப்படியே மூன்றுபுட மிட்டெடுத்தே யென்னுடைய
சொற்படிகேள் சுக்குடைய தூள். 70

தூளிற்பணவிடைகொள் தீரும்நோய் சொல்லுகிறேன்
வாழ்வான குன்மமெட்டும் வாய்வனைத்தும்-பாழான

எந்நோயுந் தீரு மெளிதல்ல வென்றாளே
முன்னாளி லென்றாயார் முன்னி. 71

## 22. பவழ பற்பம்

சொற்பமல்ல வென்றாயார் சொன்னவய ணங்கேள்
கற்பவழம் வாங்குவாய் கண்ணுதலே-அப்புறங்கேள்
தெள்ளு முயலுதிரந் தேடியதி லேபிசறி
வள்ளமதின் மூன்றுதினம் வை. 72

வைத்ததொரு நற்பவழம் வாகான சுத்தியதாம்
தப்பா திலந்தையிலை தானரைப்பாய்-மெய்ப்பாக்
கவசமிட் டீரைந்து கானத் தெருவில்
திவசமிட்டு நற்புடஞ்செய் தீ. 73

சீரான பற்பத்தைத் தேறாவின் வெண்ணெயிலுண்
தீரு ந்தா ரக்காசஞ் செவ்விதாய்ப்-பாருலகில்
நீரடைப்பு வெட்டைமுத னீங்கிடுமே விந்துநஷ்டம்
மாரடைப்பு மில்லை மகிழ். 74

வெள்ளரியின் சாறு வேண்டு மரைப்படியில்
கள்ளக்கா யத்தைக் கரைத்துவிட்டு-உள்ளதுகேள்
அல்லலொடு முண்டே யவன்முகங்கீ ழாய்ப்படுக்க
கல்லடைப்பாங் கல்விழுகுங் காண். 75

## 23. நாகச் செந்தூரம்

சுத்திசெய்த நாகந் துலங்குபல நான்காக
நத்துசட்டி யிட்டு நவிலக்கேள்-புத்தியுள்ள
நாழி வெடியுப்பு நல்லோமஞ் சுக்குமஞ்சள்
வாழிபொடி யிட்டு வறு. 76

இட்டுவறுத் தத்தூளி லேங்காத நாயுருவி
பொட்ட விடித்ததையும் போட்டுவறு-நட்டமற
மாதளம்பூப் போல மானே பழச்சாற்றாற்
போதமுற வேபுடத்தைப் போடு. 77

போட்டெடுத்தச் செந்தூரம் போற்றிப்பணவிடையாம்
சூட்டுந் திரிகடுகுச் சூரணத்தில்-ஊட்டிடக்கேள்
குன்மம் பெருவயிறுங் கூடுதசை யாங்கவிசை
பன்னுலகின் மூலமும்போம் பார். 78

மூலமும்போ மேகவகை முன்னுதொண்ணூற்றாறுங்
காலுடனே கையெரிவுங் காணாது-வேல்விழியே
மேகத் தடிப்புகுஷ்டம் விந்துநஷ்டம் வெள்ளைகடற்
பாகத்திற் போய்ப்பதுங்கும் பார். 79

## 24. அக்கினி குமார செந்தூரம்

அயப்பொடியு மேநான் கனற்காந்த மெட்டு
பயமில்லாச் சூதம் பதினா-றுயர்வுற்ற
கெந்தி யிதற்கிரட்டி கேள்குமரிச் சாறுவிட்டு
முந்தியிரு சாமரை முன். 80

அரைத்தமருந் தைக்கலக்கி லப்பிவெய்யில் வைக்க
இரைத்தருந்தீ பம்போ லெரியும்-விரைக்குழலாய்
குன்ம மகோதரமுங் கூடுதசை யாங்கவிசை
பன்னுமுளை மூலம்போம் பார். 81

மூல மகோதரமு மோசக் கிராணியொடு
ஏல வுறுபுளித்த வேப்பமறும்-தாலமதில்
அண்டவா தஞ்சன்னி யானதற்கு மேபணந்தான்
உண்டுபா ரிஞ்சியிலோ டும். 82

## 25. அயக்காந்தச் செந்தூரம்

பாந்தமாஞ் செந்தூரம் பாடுகிறோம் பாவையரே
காந்த மரப்பொடியுங் கட்டாகச்-சேர்ந்தனையாய்
ஓர்நிறையாய்ச் சுத்தியுஞ்செய் தூட்டியரைகல்வத்தில்
ஏர்நிறைந்த காமப்பா லிட்டு. 83

பாலிட் டரைத்துவில்லை பத்திரமாக் காயவைத்து
மேலிட்டோட் டில்மண்செய் மெல்லியரே-காலிட்ட

அன்ப தெருப்புடஞ்செ யாறியபின் னீயெடுத்துப்
பண்புடனே செய்முறையைப் பார். 84

பாருலகி லின்னம் பகருகொடுப் பைச்சாறு
நேருகரந் தைச்சாறு நீளவே-ஓர்நிறையாய்
நாற்சாம மாட்டி நயந்துமுன் போற்புடஞ்செய்
தாழ்ச்சியிலைச் செந்தூரந் தான். 85

செந்தூரங் குன்றியிடை சேர்ந்தசுக்கின் றூளிற்கொள்
வந்தபடர் மேக மடியுமே-நந்திசொன்னார்
காமாலை சூலை கழல்வாதங் கால்வெடிப்பு
போமாலைப் பித்தவெட்டை போற்று. 86

போற்றுங்கை காற்குடைச்சல் பொல்லாத குன்மமெல்லா
மாற்று மதிசார மாரு ழதம்-தேற்றமிகு
பத்தியஞ்செய் பெண்புகையும் பார்த்துப் புளியகற்று
சத்தியஞ்சொன் னேன்பிணிபோந் தான். 87

## 26. மால்தேவிச் செந்தூரம்

பாருலகி லின்னமொரு பாகம் பகருகிறேன்
சீருமால் தேவி சிலைலிங்கம்-நேரான
கெந்தி யரப்பொடியுங் கேணாகஞ் சூதமிது
முந்தியே யோர்நிறையாய் முன். 88

மின்னே யெழுவகையும் வேண்டிக் கருவேம்பின்
தன்னுடைய சாறுவிட்டுத் தானரைப்பாய்-மன்னொருநாள்
தப்பாமல் வில்லைசெய்து சாதகமா யைந்தெருவில்
அப்பா புடமிடன்ப தாய். 89

ஆறவெடுத் துப்பா ராரறிவார் செந்தூரம்
மீறாமற் குன்றியிடை வெண்ணெயிலுண்-பாறாத
நோயுண்டோ மானிடர்க்கு நுண்மையுடன் சொல்லுகிறேன்
ஆயகுன்மஞ் சூலையும்போ மால். 90

போகுமே காசமெல்லாம் பொய்யல்ல மேகமெல்லாம்
சாகுமே குஷ்டந் தமர்வாயு-மேகுமே
பித்தங் கிறுகிறுப்பும் பேசுங்கை காலெரிவு
சத்திவிக்க லெல்லாம் போந் தான். 91

விக்கல்போஞ் சன்னிசுர மேவு மிழுப்பிசிவும்
பக்கவா தங்களெல்லாம் பாழாகும்-மக்களுக்கு
மேகவெட்டை வெள்ளையொடு மேவும் பிரமியமும்
தோகையர்க்குச் சூதகம்போஞ் சொல். 92

மிக்க வழகுடைய மெல்லியரைக் கூடுதற்கு
தக்கபெருந் தத்துவமே தான்செயும்-ஒக்கவே
தேகமே பொன்னிறமாஞ் செப்பினோஞ் செந்தூரம்
பாகசெம்பிற் பத்திலொன்று பார். 93

பத்திலொன்றை யீயப் பகர்ந்தேனா னேழரையாம்
புத்தியுள்ள சீஷருக்குப் பொன்னாகும்-வெற்றியிது
பாவிகளுக் கென்றும் பகராதே நீமடிவாய்
தேவியைநா டோறுஞ் செபி. 94

## கர்ம நிவர்த்தி

வேதமுறும் பூவுலகில் மேவு மனுக்களுக்கு
வாதகர்மத் தாலுடலில் வந்தபிணி-பேதமில்லா
நல்மருந்தாற் றீர நாமுரைத் தோம் பண்டிதரே
வெல்லுகர்ம நீக்கிவிடும். 95

நீக்கோர் புதுக்கலசம் நீரோட்ட மானதின்மேல்
சீக்கிரத்திற் றெப்பையில்வை தீர்க்கமாய்-காக்கவே
சங்குபா சம்மொரு நூல் தாளறுகு வேர்நூலுந்
திங்கள்மா வோர்நூலிற் செய். 96

செய்துவா லைக்கித் திறப்பூசைப் பண்டமுமே
உய்துவைத்து நூற்றெட் டுருமீளா-நெய்யதனை
முன்வை யெதிர்நீயும் மோசமென்ன சீரகத்தை
அன்னமே முன்வைத் தரை. 97

அரையுமே மூன்றாநா ளானகதிர் வாரம்
திரையாந்தோ ஷக்கருமஞ் சேருந்-தரைமீதில்
நில்லா ததன்பின்னே நீமருந்தை யூட்டுவாய்
எல்லாப் பிணியும்போ மே. 98

எல்லாரும் பண்டிதரோ வென்மகனே துற்கருமம்
இல்லா தகற்றினவ னீசனாம்-நல்லதொரு
சாஸ்திரத்தின் றன்கிரிகை சற்றும் பிசகாமல்
நேர்த்தியாய்ச் செய்வாழ்வாய் நீ. 99

பார்த்தலத்தி லிந்நூலைப் பாடினே னென்னாவால்
சீர்த்திநிறை சூஸ்திரமாச் செப்பவே-பார்த்தவுடன்
சிந்தும்பொய் யென்று திறஞ்செய்வீர் வீணாகும்
முந்துமெய்யென் றோதுமிந்நூல் முற்று. 100

நசகாண்டம் மூலம் முற்றுப் பெற்றது

கடவுள் துணை

# நசகாண்டத் தெளிபொருள் விளக்கம்

சகோதரர்களே! மேற்படி பெயர்பூண்ட வுரையை இதனுடன் எழுத நேரிட்ட காரணம் கீழ்க்காணும் விஷயங்களால் வெள்ளெனத்தெள்ளியதாய் விளங்கும். நசகாண்டம் நூறு என்னும் இந்நூலின் முகவுரையிற் சொன்னபடி இக்கிரந்தமானது யாவரும் எளிதில் தெரிந்து கொள்ளும் படியாய் மிகவும் தெளிவான தமிழ்ச் செய்யுட்களினால் செய்யப்பட்டிருப்பதால் இதற்கு உரை முதலியவைகள் அனாவசியமென முன்னர் உத்தேசிக்கப்பட்டது. ஆனால், அவற்றுள் அநேக பாகங்களில் நிறை, அளவு, பிரமாணம், செய்பாக முதலியவைகள் திட்டமாய்ச் சொல்லப்படவில்லை யாதலின் அவ்வித பாகங்கள் அனுபவசாலி களாகிய வைத்தியர்களுக்குப் பிரயோசனப் படுமேயொழிய மற்றவர் களுக்கு அவ்வளவாய்ப் பிரயோசனப்படா.

மேற்படி கிரந்தமானது மூல பாடமாயிருந்து தேர்ந்த வைத்தியர்களுக்கு மட்டும் பிரயோசனப்படத்தக்கதா யிருப்பினும் நம்மால் வெளிப்படுத்தப்படும் ஒவ்வொரு கிரந்தத்தையும் கைக்கொண்டு நம்மைப் பலவிதத்தாலும் ஆதரித்தும், உற்சாகப்படுத்தியும் வரும் ஒவ்வொருவருக்கும் இது பிரயோசனப்படவேண்டுமென்பதே நமது கருத்து.

அநுபவசித்தமானவைகளும் செய்வதற்கு மிகவும் சுலபமானவைகளும் ஒவ்வொரு குடும்பத்திற்கும் அவசியமானவைகளுமான அநேகமுறைகள் இக்கிரந்தத்தில் சொல்லப்பட்டிருப்பதால் இது மிகவும் முக்கியமும், அபூர்வமுமான கிரந்தங்களில் ஒன்றென்பதிற் சந்தேகமில்லை.

ஆகையால் அவ்வகைக் கிரந்தமானது கூடியவரையில் விபரமாக இருக்கவேண்டியது மிகவும் அவசியம்.

இன்னன பலவகைக் காரணங்களினால் இதில் சொல்லப்படும் சிகிச்சைகள் முதலியவைகளைப் பல பெரிய நூற்களை யனுசரித்தும், அனுபவத்தின் படியுமெழுதி ஆங்காங்கே முறைகளுக்கேற்பட்ட நிறை, அளவு செய்பாக முதலியவைகளை விபரமாகவும் தெளிவாகவுமெழுதி யிருக்கிறோம். ஆகையால் இது யாவருக்கும் பிரயோசனப்படு மென்பதில் எவ்வித சந்தேகமுமில்லை.

ஆகையால் சுதேசாபிமானமுள்ள கனவான்களும், மற்றவர்களும் எம்மா லியற்றப்பட்ட யூநாநிவைத்திய தாது விர்த்திபோதினி முதலிய கிரந்தங்களை அங்கீகரித்து எம்மைப் பலவிதத்திலும் கனப்படுத்தி வருவதுபோல. இந்த நசகாண்ட நூற்றையும், இனிமேல் அச்சிடும் பல கிரந்தங் களையும் அதகீகரித்து ஆதரித்து வரும்படியாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

இக்கிரந்தத்தினாலுண்டாம் பிரயோசனமாவது:- பல சாஸ்திரப் பயிற்சியும் வெகுநாள் அனுபவமுமுள்ள ஒரு வல்ல பண்டிதர் சமீபத்திலிருந்து உற்றசமயத்தில் தம் முடைய தந்திரோபாயச் சிகிச்சைகளைச் செய்து உதவி செய்வதைப் பார்க்கிலும் அதிகமாய் இக்கிரந்தத்தை ஆதியோடந்தமாய்க் கவனித்து முறையே நடப்பவர்களுக்கு மகா வியாதிகளினின்றுந் தப்பித்துக் கொள்ளும் மார்க்கத் தையும், வைத்திய சிகிச்சாக் கிரமங்களையும் முறைகளை யும் அறியாமையினால் நேரிடும் வீண் வைத்தியச் செலவை மீத்துக்கொள்ளு மார்க்கத்தையுங் காட்டி இது உற்ற சமயத் தில் தெற்றென உதவி புரியு மென்பதே.

ஆகையால் நோயற்ற வாழ்வை விரும்பும் ஒவ்வொரு அறிவாளிகளும் தங்களுக்கும், தங்கள் மனைவி, மக்கள், சிநேகிதர்கள் முதலிய யாவருக்கும் பிரயோசனப்படும்படி இதனை ஆதியோடந்தமாய்க் கவனித்து இதன்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதே எமது கோரிக்கை.

ஆகையால் இக்கிரந்தத்திற் சொல்லப்பட்டிருக்கிற பற்பலவகை முறைகளையும், பத்தியம் பாவனைகளையும் கவனித்து அவற்றின்படி நடந்து கொள்பவர்கள் கடவுளினது கிருபையால் பலவகை நோய்களினின்றும் நீக்கப்பட்டுச் சுகானுபவங்களை யுடையவர்களாய் இம்மை மறுமைக்குரிய பயன்களை யடைந்து நீடூழி வாழ்வார்கள். ஆமீன்.

## 1. மாந்தக் கஷாயம்

நல்ல வேளைவேர், மேற்றோல் சீவின சுக்கு, வெந்தயம், மேற்றோல் நீக்கின வெள்ளைப் பூண்டிதழ், வசம்பு, ஓமம், இவை வகை-ஒன்றுக்கு விராகனெடை அரை.

செய்முறை

மண் பாத்திரத்தை அடுப்பில் வைத்து வசம்பை நைய நறுக்கிப்போட்டு அதையெரித்துச் சாம்பலாக்கி வெண்ணிற மான சாம்பலான பின்பு வெந்தயத்தைப் போட்டு அதனை இளவறுப்பாக வறுத்து வேளை வேரையும், வெள்ளுள்ளி யையுஞ் சிதைத்துப் போட்டு இரண்டு நிமிஷம் சென்ற பின்பு சுக்கையும் தட்டிப்போட்டு முக்கால் ஆழாக்கு ஜலத்தை வார்த்து மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கிப் பானஞ் செய்விக்க வேண்டும். இவ்விதம் சமயோசிதமாக தினம் இரண்டு மூன்று தடவை பானஞ் செய்விக்க எல்லாவகை மாந்த ரோகங்கள், அஜீரணரோகங்கள், பால்கட்டு ரோகங்கள் முதலியவைகள் தீரும்.

## குறிப்பு

மேற்கண்ட எடையானது ஒரு வயதிற்குட்பட்ட குழந்தைகளுக்காம். இரண்டு வயதிற்குட்பட்ட குழந்தை களுக்கு மேற்கண்ட எடையை யிரட்டித்துக் கொள்ள

வேண்டும். மூன்று வயதிற்குட்பட்ட குழந்தைகளுக்கு முன் எடையை மும்மடங்காக்கிக் கொள்ளவேண்டும். நான்கு வயதிலிருந்து பத்துவயது வரைக்கும் மேற்கண்ட அளவேயாம். பத்துவயதிலிருந்து பதினாறு வயதுவரைக்கும் நான்கு மடங்காக்கிக்கொள்ள வேண்டும். இதன் எடையை அதிகப்படுத்துவதும் குறைப்பதும் வியாதிபலம் தேகபலம் ஆகியவைகளைச் சார்ந்ததாகையால் சிகிச்சகர்கள் அந்தந்தச் சமயத்திற்குத் தக்கவாறு குறைத்தும் அதிகப்படுத்தியும் உபயோகிக்க வேண்டியது ஆவசியகமாம்.

மேற்கண்டபடி கஷாயமாகச் செய்து கொள்வது சில சமயங்களில் கஷ்டமாகவிருக்கும். ஆகையால் கீழ்க்கண்டபடி திராவகமாக இறக்கி வைத்துக் கொள்வதினால் எந்தச் சமயங்களிலும் உபயோகித்துக் கொள்ளுவதற்குச் சுலபமாகவிருக்கும். இன்னும் சிறு குழந்தைகளுள்ள குடும்பத்தில் இதனைச் சித்தப்படுத்தி வைத்திருப்பது மிகவும் ஆவசியகமாம். இதனால் அனேக சுகுணங்களுக் கேதுவாகும்.

## மாந்தத் திராவகம்

வேளை வேர்த்தோல், மேற்றோல் சீவினசுக்கு, வெந்தயம், தோலுரித்த வெள்ளைப் பூண்டிதழ், சுட்டெரித்த வசம்புச் சாம்பல், ஓமம் இவை வகை 1-க்குப் பலம் 10.

செய்முறை :

வேளைவேரை மண் பாத்திரத்திற் போட்டு அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து வதக்கியெடுத்துக் கொள்ளவும். வெந்தயத்தைச் சட்டியிற் போட்டு இளவறுப்பாய் வறுத்துக் கொஞ்சம் மணம் வரும்படியாக வறுத்தெடுத்துக் கொள்ளவும். வெள்ளைப் பூண்டிதழ்களையும் சட்டியிற் போட்டு வறுத்து வதங்கின பதத்தில் எடுத்துக் கொள்ளவும். ஓமத்தையும் சட்டியிற் போட்டு மணம் வரும்படியாக வறுத்தெடுத்துக் கொள்ள வேண்டும். பிறகு ஆறு சரக்கு

களையும் ஒன்றாகச் சேர்த்து உரலிலிட்டிடித்து நன்றாயிடி பட்டபின்பு இரண்டுபடி ஜலத்திற் போட்டு வாலையிலிட்டுப் பாகப்படி இரண்டு புட்டி திராவகமிறக்கிக் கொள்ள வேண்டும்.

பிரமாணம் : அரை-விராகனெடை முதல்- - விராக னெடை வரையில் உபயோகிக்கலாம். பெரியவர்களுக்குக் காற்பலமுதல் ஒருபலம் வரையில் உபயோகிக்கலா .

அனுபானம்: முலைப்பால், தேன், வெந்நீர், சர்க்கரை முதலியவைகளாம்.

உபயோகம் : குழந்தைகளுக்குண்டாகும் எல்லாவகை மாந்தரோகங்கள், அஜீரணரோகங்கள், பால்கட்டு ரோகங் கள் ஆகியவைகள் தீரும். அஜீரணத்தாலுண்டாகும் பலவகைப்பேதி, மந்தாக்கினிரோகம், குன்மரோகம், விஷ பேதி முதலிய வியாதிகளில் பெரியவர்களுக்குங் கொடுத்துக் குணங்காணப்பட்டிருக்கிறது. பாலில்லாத குழந்தைகளுக்கு டின்பால், பசும்பால் முதலியவைகளை யுபயோகிக்க நேரிடும்போது அப்பாலானது சில குழந்தைகளுக்கு ஏற்றுக் கொள்ளாமல் வயிற்றுப்பிசம், வயிற்றுப்போக்கு முதலிய பல வியாதிகள் உண்டாவது சுபாவம். அந்தச் சுபாவ முடைய குழந்தைகளுக்கு அவர்களுக் கூட்டும் பாலுடன் சமயத்திற்குத் தகுந்தபடி நான்கைந்து துளி மேற்படி திராவகத்தைச் சேர்த்து ஊட்டி வருவதினால் மேற்கண்ட துர்க்குணங்கள் நீங்கிச்செவ்வையாக ஜீரணமாகும். மேற்படி திராவகத்தை வழமையாகவே பால் குடிக்கும் குழந்தை களுக்குச் சமயத்திற்குத் தகுந்தபடி தினமொன்றிற்கு இரண்டு அல்லது மூன்று தடவை அல்லது வாரத்திற்கு இரண்டு அல்லது மூன்று தடவை வயதிற்குத் தகுந்தபடி அளவாக உபயோகித்து வருவதால் குழந்தைக்கு நல்ல ஜீரண சக்தி யுண்டாகி மாந்தம் முதலிய ரோகங்கள் உண்டாகாமல் சுகஸ்திதியிலிருக்க ஏதுவாகும்.

பிரமாணம் : மாத்திரை ஒன்று, ஒன்றரை.

அனுபானமும் உபயோகமும் :

எலுமிச்சம்பழச்சாறு விராகனெடை 2, தேன் விராகனெடை 2, இரண்டையு மிஸ்ரமித்து மேற்படி ஒரு மாத்திரையை அனுபானித்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதஞ் செய்துவர எலி விஷம், பாம்பு விஷம், தேள் விஷம், நாய் விஷம், நரிவிஷம், பூனைவிஷம், பெருச்சாளி விஷம், முதலிய பல கடி விஷங்களுந் தீரும்.

நாணற் கரும்புச்சாறு விராகனெடை 2, தேன் விராகனெடை 2 இரண்டையு மிஸ்ரமித்து மேற்படி ஒரு மாத்திரையை அனுபானித்துப் பானஞ் செய்யவும். இவ்விதஞ் செய்தால் பாஷாணம், வீரம், பூரம், நாபி முதலியவைகள் விஷமித்துண்டான துர்க்குணங்கள் நீங்கி மேற்கண்ட விஷங்கள் முறிந்து போகும். இன்னும் ஈட்டு மருந்தால் உண்டான துர்க்குணங்களும் நீங்கி மருந்தின் வேகமும் நீங்கிப் போகும்.

நெல்லிப்பட்டைச் சாறு, விராகனெடை 2, தேன் விராகனெடை 2 இரண்டையு மிஸ்ரமித்து மேற்படி ஒரு மாத்திரையை அனுபானித்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதஞ் செய்துவர முகக்கடுப்பு, ஜன்னி, சைத்தியம், சுரம் முதலியவைகள் தீரும்.

எருமைத் தயிர் விராகனெடை 5, தேன் விராகனெடை ஒன்றரை, இவ்விரண்டையு மிஸ்ரமித்து பானஞ் செய்யவும். இவ்விதஞ் செய்து வர அதிசாரம், கிராணி முதலிய ரோகங்கள் தீரும்.

முற்றின வேப்ப மரப்பட்டை விராகனெடை 3, இதனை முக்காலாழாக்கு ஜலத்திற் போட்டுக் காய்ச்சிக் காலாழாக்காகச் சுண்டின பின்னிறக்கி வடிகட்டித் திப்பி நீக்கின கஷாயத்துடன் இரண்டு விராகனெடை தேனையுஞ் சேர்த்துப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதஞ் செய்துவர புதுசுரம், பழைய சுரம் முதலிய எல்லா சுரங்களும் தீரும்.

நற்சீரகத்தை வறுத்திடித்த சூரணம் விராகனெடை 1, சீனி சர்க்கரை விராகனெடை 1 இரண்டையு மிஸ்ரமித்து மேற்படி ஒரு மாத்திரையை அனுபானித்துட் கொள்ள வேண்டும். இவ்விதஞ் செய்துவர எட்டு வகைக் குன்ம ரோகங்களுந் தீரும்.

உலர்ந்த கண்டங்கத்திரிப் பழம் 1, இதற்குள் மேற்படி ஒரு மாத்திரையை வைத்துப் பட்டுத் துணியில் முடிந்து, தான் வழிபடுங் கடவுளைத் தியானித்து புஜத்தில் கட்டி வைத்தால், பில்லி, சூனியம், பேய் முதலியவைகள் போம்.

சிறுநீரில் மேற்படி யொரு மாத்திரையை இழைத்து எள் பிரமாணம் கண்ணிற் கலிக்கமிட, ஜன்னிவாதரோக முதலிய வைகள் தீரும்.

இரண்டு பலம், புளியம்புறணிச் சாம்பலைப் பத்துப் பலம் ஜலத்திற்போட்டு நன்றாய்க் கலக்கி ஒருநாள் தெளிய வைத்துத் தெளிவை இறுத்து சீஷாவில் வைத்துக் கொள்ள வேண்டும். இந்த ஜலம் விராகனெடை 2, தேன் விராக னெடை 2 இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்படி ஒரு மாத்திரையை அனுபானித்துப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதஞ் செய்துவந்தால் பறங்கிப் புண், பறங்கிக் குஷ்டம் ஆகியவைகள் தீரும்.

## குதிரைக் குளம்புப் பற்பம்

குதிரைக்குளம்புச் சுத்தி:

குதிரைக் குளம்பை இராவின தூள், அல்லது இடித்த தூள் பலம் 5. இதனை ஒரு பீங்கான் பாத்திரத்திலிட்டு அதில் இளநீரை விடவேண்டும். அந்த இளநீரானது தூளின் மீது ஒரு அங்குலம் நிற்கவேண்டும. இவ்விதம் விட்டு வெயிலில் வைத்து அந்த இளநீரெல்லாஞ் சுண்டின பின்பு மறுபடியும் முன்போல் இளநீரைவிட்டு வெயிலில் வைத்துச்

சாடி வழித்தெடுத்துத் தாணுவிற்கு மேற்பூசி
நீடியவெப் பத்திலிட்டு நீயுலர்த்திக்-கூடியே
முன்கவசம் பின்னு முறையாகச் செய்தெடுத்துப்
பன்கலத்தில் முக்காற் படி. 70

இரட்டித்த நன்மணலை யேற்கவே கொட்டிப்
பரப்பி யிரண்டு பலமாந்-திரத்ததொரு
வாற்கிளிஞ்சிற் றூளை வாமா வதிலிட்டு
மேற்கவசம் வைத்து விடு. 71

அதன்மேன்முன் சொற்ற வளவாகுந் தூளை
யிதமாகச் சேர்பின் னிரண்டாம்-படிமணலிற்
காலிரண்டு நீக்கிக் கனக்கப் பரப்பியதன்
மேலிரண்டு கையாலும் வேண்டி, 72

உரத்தவொரு சட்டியெடுத் தோதுமட்க லத்திற்
றிரத்துடன்மேன் மூடிமண்ணாற் சீலை-நிரப்பியே
நாடி யடுப்பேற்றி நாற்சாம மட்டுமெரி
கூடியநற் பற்பமா கும். 73

பற்பத் திரண்டு பகர் தண்டுலத்தெகையை
நற்பசுவின் பால்வெண்ணெய் நாடியே-வைத்தருந்தப்
பத்திரட்டி யோர்தினத்திற் பண்பாம் பலந்தேக
சத்திட முண்டாகுந் தான். 74

பத்தியங்கேண் மானே புகர்புளியும் பெண்விருப்பும்
நத்துமெண்ணெ யுட்டணமே நண்ணிவரும்-வத்துக்க
ளாகாவிவற்றை யகற்றிவிட வேண்டு மன்றேற்
போகா நோயென்றே புகல். 75

## 42. மகா வீரிய லிங்கச் செந்தூரம்

பண்பா மிலிங்கம் பலமூன் றெடுத்திடுவாய்
எண்சீனக் கார மிடித்ததூள்-நண்ணாறு
கொண்ட விராகன் குழிச்சிலையி லிட்டுக்கான்
மண்டுகள்ளிப் பாலையதில் வார். 76

விட்டரைத்துப் பின்றை விரைந்துவழித்தே முன்சொல்
கட்டிக்குப் பூசிக் கவசமிடு-இட்டவுடன்
மாவிலவங் கத்தூளில் மன்னுபல மூன்றெடுத்துப்
பூவுறுமண் பாத்திரத்திற் போடு. 77

போட்டவுடன் கட்டிபொருத்திய தன்மேலு முன்போற்
வாட்டமற்ற தூளை வகையுடன்போட்-டீட்டமுடன்
பாத்திரத்தின் வாய்மூடிப் பக்குவமாச் சீலைசெய்து
நேத்திரம்போல் வைத்துலர்த்து நீ. 78

காய்ந்தபிற்றை நூற்றிருபான் காட்டும் பலவறட்டி
ஏய்ந்த புடமிட் டெடுக்கவே-மாய்ந்திலந்தைத்
தீங்கனியைப் போன்றநிறச் செந்தூர மாகிவிடும்
பாங்குறவே நீபதனம் பண் 79

பண்ணியிரு தண்டுலத்தைப் பாலாடை வெண்ணெயிலே
நண்ணக் கொடுத்துவிடு நங்கையே-வண்ணமிகும்
ஆண்மையற்றோர்க் காண்மைமிகு மாகத்திற்றாது முண்டாம்
பூண்மைய லோங்குமிதைப் போற்று. 80

போகம் புகையும் புளியு மிளகாயும்
ஆகம் பொருந்திவர லாகாது-சோகங்
கெடுக்குநெய்பால் நெய்பிற் கிளரப் பொரித்துக்
கொடுப்பவைக ளாமிவற்றைக் கூட்டு. 1

## 43. ஷை வேறு

ஆறுபலந் தேனு மவ்வளவா நற்குமரிச்
சாறுங் கலந்திருப்புச் சட்டிவிட்டுக்-கூறுமறு
மாவிரா கண்சிவத்தை வாய்ந்தவதிற் போட்டேநீ
ஏவமிலா வேறொடுப்பி லேற்று. 82

ஏற்றிச் சிறுக வெரித்துவிட்ட சாறனைத்து
மாற்றமின்றி வற்றும் வகைகண்டு-போற்றி
எடுத்ததன்மீ துள்ளபற்றை யேற்கவே நீக்கி
அடுத்து முன்சொல் மார்க்கம்போ லாக்கு. 83

ஆக்கியெடுத் தேசுறண்டி யானகல்வ மீதிட்டு
மாக்குக் குடக்கருவின் மஞ்சளிற்றேய்-நாற்சாமம்
வில்லையொன்று செய்தகலின் மேலிட்டு மேன்மூடிச்
சொல்லுமைந்து சீலைமண்ணைச் சுற்று. 84

வழுத்துபல மாறாம் வறாட்டிதனைச் சேர்த்தே
அழுத்தப் புடமிட் டழலும்-பழுத்தாறி
விட்டபின்பு நீயெடுத்து மேல்வகையே மீண்டரைத்து
வட்டவெரு முன்னிரட்டி வாங்கு. 85

வாங்கிப் புடமியற்றி மானேமுன் மார்க்கஞ்செய்
தாங்குபதி னெண்பலத்திற் சார்புடத்தைப்-பாங்கி
லியற்றியே யம்முறைபோ லீண்டும் புரிந்து
நயத்த வெருவளவை நாடு. 86

நாடுவாய் நாலாறு நற்பலத்தி லேபுடத்தைப்
போடுவா யாறியபின் பொற்கொடியே-தேடி
யெடுத்துப் பொடித்தே யியற்றுஞ் சீசாவுட்
படுத்துவாய் பின்மார்க்கம் பார். 87

குன்றியெடை யொன்றோ குறித்தவதிற் பாதியோ
ஒன்றுபாற் கட்டிவெண்ணெ யுட்படுத்தி-குன்றியவர்க்
கீந்தா னரம்புமுறுக் கேறியே தேகமெல்லாங்
காந்திமிகும் போகசத்தி காண். 88

நெஞ்சிற் றிடமு நினைவிற் குதூகலமும்
வஞ்சியரைக் கூடி மருவுதற்கா-மிஞ்சியதோர்
வீரியமு மாகும் விளம்புபுளி பெண்டள்ளு
காரியங்கை கூடுமெனக் காட்டு. 89

## 44. மகாவீரிய லிங்கமெழுகு

தங்குமீ யம்பூசாத் தாம்பிரத்தின் சட்டியிலே
நங்கையயே வாலுழுவை நல்லரிசி-பொங்கும்விரா
கன்பதினெட் டிட்டுக் கருதுநிறை பன்னிரண்டாய்
மின்துருசை மேலேநீ வை. 90

வைத்துவெயில் வைத்துநிதம் வாகாப் புரட்டிவந்து
நத்தியிரு பத்தொன்றா நாளிலெடு-பற்பமாம்
அள்ளிமுப்பத்தைந்து பல மாந்திருகிக் கொண்டிருக்குங்
கள்ளிப்பா றேடிக் கறந்து. 91

கறந்தவந்தப் பாலிற் கனக்கவே போட்டு
மறந்துவிடா தோரிரவு வைத்துச்-சிறந்துவரு
மற்றைநாட் காலை வயங்குந் தெளிவிறுத்து
உற்றவொரு நற்கலத்தி லூற்று 92

கட்டினலிங் கத்தினொரு கட்டியை வராகனிறை
திட்டமுடன் மூன்றாக்கித் தேரப்பிரே-கத்தகட்டின்
மீதுவைத்து முன்றெளிவான் மேவச் சுருக்கிட்டாற்
கோதின்மெழு கென்னவா கும். 93

ஆனமெழுகி லரையரிசி தானருந்த
ஊன நரம் பெல்லா முறுதியாய்ப்-போனதொரு
நற்றாது மீறி நளிரில்வந்த நோயனைத்தும்
பற்றாம லோடிவிடும் பார். 94

வாயுவினைச் சார்ந்து வரும்பிணிகள் குன்றியங்கே
சாயு முடம்பில் வன்மை தானுண்டாம்-ஏயுஞ்சம்
போகசத்தி யாகும் புகல்பிறப்பி லுற்றவைகள்
போகமற்ற வீனமெல்லாம் போம். 95

## ஷை மெழுகின் இரசவாதம்

வாதம் விரும்பினால் வண்மெழுகிற் பத்திலொன்றை
ஓதரிய வெள்ளி யுருக்கியே-நீதமுடன்
சேர்க்கப்பொன் னாமெனினுந் தேர்ந்தவெள்ளி
பத்திலொன்று
தீர்க்கமுற நற்றாயைச் சேர். 96

# 45. வீரியவிருத்தி லேகியம்

மண்சருக்க ரைக்கிழங்கு மானே விராகனெடை
எண்பதினைந் தாகு மியன்மதுரம்-முன்பாதி
வாதுமையி னற்பருப்பும் வாழ்கசக சாவுமந்தக்
கோதின்மது ரத்தளவே கூறு. 97

சாதிக்காய் நான்கரையாஞ் சார்பத் திரியுமதாம்
காதலுறு மஞ்சட் சடுக்காய்த்தோல்-ஓதே
மூரையாமா சிக்கா யமைமூன்றா மாளி
விரையே மூரையாம் விளம்பு. 98

நல்லரிசித் திப்பிலிதா னான்முக்கால் சீவுசுக்கு
மெல்லிபதி னைந்தாம் விளங்குநீர்-முள்ளிவிதை
நாற்பத்தைந் தாகுமே நாடியகத் தூரிமஞ்சள்
ஏற்கமூன் றாகு மியம்பு. 99

வென்றபூ னைக்காலி வித்தா றபினிநிறை
ஒன்றரையா மீதெல்லா மொண்டொடியே-ஒன்றும்
விராகனிறை யாமறிந்து மேவி யெடுத்துப்
பராபரத்தை மிக்க துதிபண். 100

துதிசெய் திவற்றைநன் றாச் சூரணித்துக் கொள்வாய்
நிதிசேரரைப்படியா னெய்யை-மதியுடனே
வாங்கிச்சுத் தித்தகஞ்சா வாய்ந்தபலம் நான்கரையைப்
பூங்குழலாய் கொண்டதிலே போடு. 101

ஆத்திரமாக் காய்ச்சியதி லானகஞ்சா நீக்கிநெய்யை
மாத்திரநீ வேறா வடித்துவைப்பாய்-பாத்திரத்தில்
ஆறு விராக னருமுருங்கைப் பிஞ்சேனும்
கூறுபூ வேனுமுடன் கொள். 102

கொண்டரைக்கா லாகவிங்கு கூறும் படிதேனில்
அண்டவே போட்டாட்டி யத்தேனைத்-துண்டா
எடுத்துவைத்துப் பின்புதுலா மேற்றபதி னைந்தில்
அடுத்தகண்டு சீனியெடுத் தா. 103

நற்பா லரைப்படியை நாடியெடுத்தூற்றியே
சொற்போல பாகட்டுச் சூரணத்தைப்-பொற்பா
வடிகட்டிக் கொட்டி வளர்தேன் குழம்பை
உடன்விட்டு நன்றா வுழக்கு. 104

கஞ்சாவி னெய்யைக் கருத்துடனே பின்புவிட்டங்
கஞ்சாமற் கிண்டிமெழு காம்பதத்தில்-எஞ்சாமற்
கண்டிறக்கிக் கங்குலிலே காணுமரைத் தோலாவுட்
கொண்டிடிற்றா துண்டாகுங் கூறு. 105

தேகம் பளபளத்துத் திங்களெனத் தோற்றியே
வேகம் பலமனைத்து மேவுமே-போகம்
புரியத் தகுதிவரும் பொற்கொடியார் விட்டுப்
பிரியாரென் றேபுகழ்ந்து பேசு. 106

## 46. ஷை (வேறு) லேகியம்

கசகசா சுக்கு கறுவாப்பட் டைமா
நசைசேர் மிளகுமல்லி நன்மை-இசையுஞ்சா
திக்காய்சா திப்பத் திரிகிராம் பேலரிசி
தக்ககஞ்சா வொவ்வொன்றுந் தான். 107

ஒன்றே பலமா வுறுதியுடன் கொண்டுகஞ்சா
நன்றாகச் சுத்திசெய்து நாட்டியே-நின்ற
சரக்கனைத்தும் பொன்னிறத்தைச் சார வறுத்துத்
திரத்துடனே சூரணங்கள் செய். 108

செய்தபின்பு நற்குளத்திற் சேர்ந்த பலமூன்று
நொய்யபனை வெல்ல நுவலெட்டு-நெய்யாறுங்
காலுஞ்சேர்த் துப்பிசைந்து கான்சுண்டைக் காயளவு
மாலுடனுட் கொண்டுவரு வாய். 109

இன்னுமொரு மார்க்க மியம்பக்கே ளந்திழையே
மன்பூமிச் சர்க்கரையின் மாமூலம்-பன்னு
நிலத்தின் பனைக்கிழங்கு நேர்பேதா னாத்தூள்
தலத்துறுசா லாமிசிறி சார். 110

காகுல் மிசிறிமதன் காமப்பூ காதலுறு
மாகுணஞ்செ யும்றூமி மஸ்தகிதான்-ஆகும்வகைக்
கோர்பலமுங் குங்குமப்பூ வோரரைக்கா லுந்தலத்தில்
வேர்சேர்பூ னைக்காலி வித்து. 111

ஆனபதின் முப்பலமு மாரபின்து லாங்காலும்
மானமுடன் சேர்த்திடிப்ப வையிடித்து-ஈனமின்றி
முன்மருந்தி லெல்லா முயங்கவே சேர்த்துவிட்டு
உன்சத்திக் கொத்தவா று. 112

பொன்னி னிரேக்கு புகல்வெள்ளிப் பற்பமுடன்
சின்னமிலா வப்பிரக செந்தூரம்-மின்னுகின்ற
காந்தசெந் தூரங்கரும் பொன்செந் தூரமிவை
ஏந்திக் கலந்துகொள்வா யே. 113

இவ்வாறு செய்த விலேகியத்திற் கெம்மருந்து
மொவ்வாது வீரியத்தை யுண்டாக்கும்-எவ்வாதுஞ்
சேராது தேகதிடம் செவ்விரத்த மீறுமல்லல்
வாரா திதனால் வழுத்து. 114

## 47. வீரியத் திலா

வீட்டுகரு நாபி விளம்பும்வா ளப்பருப்பு
கோட்டி லுறுமெட்டிக் கொட்டைமிகு-காட்டிலுறு
வெண்குன்றி யின்பருப்பு மேயவிவை யொவ்வொன்றின்
கண்ணான் கரைவிரா கன். 115

முந்தி யெடுத்தேநீ மூவிருவி ராகனெடை
இந்திரகோ பத்தை யிசைந்தெடுத்தே-தந்திரமாக்
கொள்ளவொன் றாக் கூட்டிக் குலவிருபா னான்குபலம்
வெள்ளாட்டின் பாலை விடு. 116

வடலின்றி யாட்டி மிளிர்மாத் திரைகள்
கடலையள வாப்புரிந்து கண்ணே-கெடலரிதாம்
நல்ல குழித்தயில நாட்ட முட னேயிறக்கி
அல்லிலே தேர்ந்தெடுத்திங் காண். 117

குறியிற் றடவிவரக் கோணலடிப் பாகஞ்
சிறிதா யிருத்தனுனி சீர்விட்-டறியப்
பெருத்திருத்தல் சோர்வடைதல் பேசுமிவை யாவும்
பொருத்தமுறப் போய்ப்பலமாம் போற்று. 118

## 48. தாளகப் பற்பம்

சுத்திசெய்த தாளகத்திற் றோற்றியவி ராகனிறை
பத்தியுடன் மூன்றெடுத்துப் பக்குவமே-பெற்றகல்வம்
நண்ணவைத்து நீபொடித்து நற்குக் குடங்கொடுத்த
வெண்முட்டை யின்கருவை விட்டு. 119

ஆட்டி யுருட்டியந்த வண்டத்தோட் டுள்ளுறவே
போட்டதனால் மூடிப் புகல்பத்தா-நாட்டுபலங்
கோதுமையின் மாவாற் குறித்துக் கவசமிட்டு
வாதிலிதற் காநான் மடங்கு. 120

புல்லும் வறட்டிப் புடம்போட் டதுசிவந்த
நல்ல சமையத்தை நாடிநீ-ஒல்லையிலே
அஞ்சா தெடுத்துச்சூ டாறியபின் னேபிரிப்பாய்
வஞ்சியே பற்பம் வரும். 121

ஆமிப்பற் பத்தி லரிசியெடை நான்கெடுத்துத்
தோமில்லா வெற்றிலையிற் றோற்றவைத்துப்-பூமியுள்
ளோர்
தின்றாற்குட் டங்கிரந்தி தீரும்வெண்ணெய் சேர்த்தருந்தப்
பொன்றாத விந்து புகும். 122

## 49. ஷை (வேறு)

வெங்காய மொன்றை விரும்பியெடுத் தேயிதழ்க
ளங்கரத்தாற் போக்கி யதனடுவே-தங்குநல்ல
வுள்ளிக்குள் ளேதுளையிட் டுட்கொள் ளளவுசுத்தித்
தெள்ளியதோர் தாளகத்தைச் சேர். 123

எடுத்தவித மெல்லா மெடுத்தபடி சேரத்
தொடுத்தேழு மண்சீலை சுற்றி-அடுத்தநாற்
பான்பலவ றாட்டி பரப்பி யவிபுடத்தை
வான்பெறவே போட்டு மகிழ். 124

ஆனந்த மாயெரித்தங் காறியபின் னேயெடுக்க
நானந் திகழ்நுதலாய் நற்பற்பந்-தானந்த
மாத்திகழுங் குன்றி மணியொன் றரைவலிய
காத்திரத்தாற் குற்றவெண்ணெய் காண். 125

வெண்ணெயிலு மிக்க விருத்தருக்கு முந்திரிகை
வண்ணப்பழச் சாற்று மாட்டிவிடு-எண்ணரிய
பக்கவா தம்போய்ப் பசியமுக வாதமற்று
மிக்கதா தாகுமிது மேல். 126

## 50. இலிங்கச் செந்தூரம்

கட்டினவி லிங்கங் கரும்பொன்னின் சட்டியிட்டு
முட்டைத் தயிலத்தை முன்னிவிட்டே-இட்டமுடன்
ஏற்ற சுறுக்கிட் டெடுத்துப் பொடித்தரிசி
சாற்றும்வெண்ணெய் தேனிலே தான். 127

வீரவிக் கொடுக்க விளங்குநரம் பெல்லாந்
தரமாப் பலத்துரிய தாதுந்-திரமாகுந்
தேகசத்தி யுண்டாந் திருவுண்டாம் சீர்பெறுசம்
போகசத்தி யுண்டாம் புகல் 128

## 51. ஜீவாமிர்த லிங்க பற்பம்

கலிங்கத் தலைவெட்டக் காணுமொன்றின் கட்டி
யிலங்க விராக னெடுமூன்-றலங்கா
இலவங்கச் சூரணத்தி லேற்றவிரு முக்கால்
துலங்கும் படிக்காரத் தூள். 129

மூன்றுபலங் கொண்டு முழுமண் கலத்தில்முன்னே
ஆன்றபடிக் காரத் தரைப்பங்கை-என்ற
வடியிட் டிலவங்கத் தாம்பொடியிற் பாதி
மிடியின்றி மேற்போட்டு மேல். 130

கட்டிதனை வைத்துக் கருதிலவங் கத்தூளில்
விட்டிருந்த பாகத்தை மேற்போட்டே-அட்டியின்றி
நின்றபடிக் காரத்தி னேர்பொடியை யும்போட்டு
முன்றிகழும் பாத்திரத்தை மூடு. 131

பந்தகஞ்செய் தேழாப் பகர்சீலை மண்ணிட்டே
அந்தமுட னீரெழுபா னானபலம்-உந்தெருவில்
நற்புடத்தை யிட்டெடுக்க நாரணன்கை நந்தெனவே
பற்பந் திகழுமுடன் பார். 132

தண்டுலமி ரண்டேனுஞ் சாருமூன் றேனும்வெண்ணெய்
மண்டுபா லேடிவற்றில் வைத்தருந்தப்-பண்டுற்
பனத்தில்வந்த தாதுநட்டம் பாறமற்ற தெல்லா
மனப்பரிவுற் றோடும் வழுத்து. 133

நாடி பலத்துநபு ஞ்சகமெல் லாநீங்கிப்
பீடி லகு மாண்மை பிறங்குமே-நீடி
மணக்கு மளகத்தாய் மாமருந்திற் குற்ற
குணத்தையெவர் சொல்லவல்லார் கூறு. 134

## 52. விருத்த கௌமார சிவகாமிபற்பம்

வளர்ந்தசிவ காமி வராகனிரு முக்கால்
வளந்திகழ்நான் காங்காய்ச்சல் வாய்ந்தே-அளந்த
வெடியிலவ ணந்தான் விராகனிறை யாறு
கடிமிகுகூ டன்னிரட்டி காண். 135

மேவு மகலில் வெடியுப்புத் தூள்பாதி
கோவுறவே சேர்த்தக் குமரியைத்தான்-பாவையே
வைத்ததன்மே னின்ற மருபாதித் தூள்பரப்பி
நற்கூடனைப் பொடித்து நாட்டு. 136

போட்டமுத்தி மூடிப் புகமெழுமண் சீலைபிணித்
தீட்டுசத நாற்பா னெனும்பலத்தில்-நாட்டுமெருத்
தன்னிற் புடமியற்றச் சார்ந்த வெடியுப்பு
மன்னுமுமை மாதுமங் கே வாய்ந்து. 137

நெகிழ்ந்தே வதியுமதை தேர்ந்தெடுத்து நீயு
மகிழ்ந்துபொடித் தேமான் மதத்தில்-புகழ்ந்துசமன்
கூட்டிவைத்துக் கொண்டு குறித்த விரண்டரிசி
நாட்டில்வெண் ணெய் பாலேட்டி னாட்டு. 138

நாடு மிலேகியத்தி னற்றொகுதி யும்மாகும்
பீடுடன் சேர்த் துண்டுவரப் பேதையே-கூடும்
விருத்தனுங்கெள மாரதிசை மேவுவா னென்றுந்
திருத்தியுறக் கூடுந் திரு. 139

தளர்வுற்ற நாடி நடித்துமுறுக் கேறி
வளர்வுற் றிடுமனதில் வண்மை-கிளர்வுற்று
நண்ணை யுடல்வலுக்கு நற்புகைகூ டெண்ணெய்புளி
பெண்ணைவிட்டு மற்றதெல்லாம் பேண். 140

## 53. சர்வரோக சஞ்சீவி பற்பம்

மாசுவிட்ட பாலரத மானே விராகனெடை
பேசுமோ ராறெடுத்துப் பேணுகல்வ-மூசுறவே
சேர்த்தத்திப் பாலைச் சிறுகவிட்டு நாற்சாமம்
ஆர்த்தரைத்தங் கோருருண்டை யாக்கு. 141

செப்பிரண்ட ரைப்பலமாந் தேர்ந்தபெருந்தேகத்தை
ஒப்புகல்வத் திட்டுமுன்பா லூற்றியே-தப்பிலிரு
சாமமரைத் தேயுருண்டை தன்னிற் கவசமிட்டு
நேமமுடன் மண்சீலை நேர்ந்து. 142

மூன்றுசெய்து முப்பானில் மூவிரண்டு சென்றபலம்
ஆன்ற வறட்டி யடுக்கியே-தோன்ற
அவிபுடமிட் டாறியபின் னன்பா யெடுக்கப்
புவியிலுயர் பற்பமாம் போற்று. 143

இப்பற்பத் தோடுசம வேற்றவுயர் மான்மதத்தை
அப்பொழுதே சேர்த்தங் கரைத்துவைப்பாய்-செப்புமிதைச்
சேர்க்காம லும்பிணிக்குத் தேர்ந்தே செலுத்தலமம்
தார்க்குழலாய் பின்னுமிதிற் றான் 144

கத்தூரி சேர்த்திரண்டு காண் மூன் றரிசியெடை
சுத்தவெண்ணெய் பாலேட்டிற் சூழ்ந்தருந்த-மெத்தவுந்
தான்
நீர்த்துவிட்ட தாதிறுகி நேருமுயர் தம்பனமும்
ஆர்த்தநரம் பின்வலியு மாம். 145

கூறுகின்ற காயத்தூள் குன்றி மணியிரண்டு
மீறுசுக்குத் தூளுமங்கு மேயவெடை-வீறுடனே
ஒன்றாக்கிப் பற்பத் துடனுணவ சீரணமும்
பொன்றாக்குன் மப்பிணியும் போம். 146

விராக னிறைதேனில் மேவியுண்ணக் குட்டம்
பராவு கிரந்தியெல்லாம் பாறும்-தராதரங்கண்
டெண்குன் றிமணி யெடை படிக்கா ரத்தூளிற்
கொண்டபற்பத் தையெடுத்துக் கூட்டு. 147

கூட்டிவெண் ணெய்யிற் குழப்பிக் குணமாக
நீட்டிவிடு மேகப்புண் ணீளிரணம்-வீட்டுகின்ற
மேகவொழுக் கெல்லாம் விளம்புதின மூன்றினுக்குட்
சாகுமிதை யாவருக்குஞ் சாற்று. 148

சாதிக்காய் குன்றியெடை தானிரண்டு குங்குமப்பூ
ஆதியுறும் பத்திரியு மவ்வெடையாம்-நீதியுடன்
தூளாக்கிப் பற்பந் தொடுத்துண்ணச் சோரியுடன்
வீழாத தாது மிகும். 145

## 54. துஷ்டரோக சண்டப்பிரசண்ட மாத்திரை

ஆனெய்சேங் கொட்டை யமர்வா லுழுவையிவை
மானவகைக் குப்பலமா வாங்கிப்பின்-ஆன
இரண்டையுங்கல் வத்திட் டிடித்துவெண்ணெய் போன்று
திரண்டுவரும் போதுநெய்யைச் சேர். 150

கலந்துழக்கி யீயங் கலந்ததொரு தாம்ப்ரக்
கலந்துலக்கி வைத்துக் கருத்தா-நலந்திகழும்
ஆறுவிரா கன்சிவத்தை யானவத னாப்பண்வைத்து
மாறுகெட மேன்மூடு வாய். 151

வாய்மூடி யேழாகு மண்சீலை செய்துலர்த்திச்
சாய்வில்லா தேயடுப்பிற் றானேற்றி-ஏய்முதலில்
தீபாக் கினியாகச் செப்புமொரு சாமமெரி
நீபார்பின் முச்சாம நேர்ந்து. 152

ஓதுக்ம லாக்கினியா வோர்ந்தெரித்தங் காறியபின்
மாதுநல்லாய் கண்டெடுக்க மாசிவப்பாம்-சாதுவுடன்
விள்ளுமத னைப்பொடித்து மேயவிராகன் னிறைதான்
கெள்ளா றெனப்பின் குறி. 153

பற்றுப்பா டாணத்தின் பற்ப மெனினுமன்றி
உற்றபதங் கம்மேனுமோதும்வெள்ளை-பெற்றதொரு
பாடாண மேனும் பகரும் விராகனிறை
கோடாத மூன்றென்றே கொள். 154

நவ்விமத மொன்று நசைகுங்கு மப்பூவொன்
றவ்விடத்தே சேர்த்திஞ்சி யாஞ்சாற்றைச்-செவ்வி பெற
விட்டிருபத் தெட்டு மிகுசாம நீயரைத்து
வட்டமுறும் பானுமுன்னே வை. 155

திண்ணகன்ற பின்புகல்வந் தன்னிலிட்டுத் தூளாக்கி
வண்ண விலிகுசத்தின் மாச்சாற்றில்-திண்ணமுடன்
பன்னிரண்டு சாமமட்டும் பாங்கா வரைத்துழுந்து
தன்னிலுறு மாத்திரையாத் தான். 156

உளுற்றி நிழலி லுலர்த்திவைத்துக் கொண்டே
அளுர்ப்படுவோர்க் கொன்றை யரிதான்-களுறும்
அதிகாலை வெண்ணெயிலிட் டாவலுட னூட்டிப்
புதியபசும் பாலருத்திப் போடு. 157

பாலருத்த நேரிழையே பாலியத்தின் சேட்டையால்
கோலமுட னாமாண் குறிக்கோணல்-மால்மர
வந்த வடிச்சிறுமை வாய்ந்தநுனி தான்பெருத்த
லிந்தக் குணங்களொழிந் தே. 158

ஆண்மைமிகும் வேறுமருத் தாற்றீரா நோயெனவே
காண்மைமிகு மப்பிணிகள் கன்றுமே-வாண்மையுறு
கண்ணாய் பசியுண்டாங் காசமுட னேயிருமல்
நண்ணாம லோடும் நவில். 159

பருவத் துதித்த பலபிணிகட் கெல்லாந்
தருணத் துதவுதற்குச் சார்ந்தே-வருமிதுதான்
சஞ்சீவிக் கொப்பாந் தரணிமிசை யெம்மருத்தும்
மிஞ்சா திதற்கென்றே விள். 160

## 55. அம்பர் மாத்திரை

அம்பர்வீரா கன்னொன் றரையாஞ்சா லாமிசிறி
உம்பராஞ் சூரணந்தா னோரிரண்டு-வம்பாம்
பருத்தி விதைப்பருப்பு பாவையே நான்காம்
கருத்திடு கத்தூரி யுமைங் கால். 161

மாவிலவங் கத்தூளு மத்தகியின் சூரணமு
நாவிலுரை மன்மதத்தி னன்னிறையாம்-கோவிலுரை
இச்சரக்கெல் லாங்கல்வத் தேர்க்கசக சாச்சரும
மெச்சுகஷா யத்தையுடன் விட்டு. 162

நாற்சாம மாட்டி நவிலிரண்டு குன்றியெடை
ஏற்குநல்ல மாத்திரைக ளிட்டேயிந்-நூற்குளமை
தங்கத் தகடுசுற்றிச் சார்ந்தவொரு செப்பதிலே
தங்கச்செய் தேபுதிய தாம். 163

கறந்தவாப் பாலைக் கருத்துடன்கைக் கொண்டே
சிறந்தவொரு மாத்திரையைத் தின்று-நிறந்திகழப்
பாலைக் குடிக்கப் பகர் வீரியமிகுந்து
மாலைக் கொடுக்கு மதி. 164

இம்மாத் திரையா லிலகுபிர யோசனத்தை
இம்மாத் திரமென் றியம்புதற்கிங்-கெம்மாலும்
ஆகா திதனாம மானமத பாணமாம்
தோகாய் பலர்க்குமிதைச் சொல். 165

## 56. இராஜ தம்பன மாத்திரை

சேவலின்பீ சத்தைத் திரச்சுத்தி செய்திரட்டி
மேவுமிந்தி ராணியுப்பை வேண்டியே-காவலுடன்
நொய்யப்பொடி யாக்கி நுவலிரண்டு பங்கிட்டுச்
செய்யவொரு பங்கைச் சிறு. 166

கலத்திலிட்டு மேலே கனபீசம் வைத்து
நலத்துடன்மற் றைப்பங்கா நாடும்-பலத்தவுப்பை
மீக்கொளப்போட் டேமூடி மேயமணற் குள்ளிட்டுச்
சூக்குமநாற் சாமஞ் சுடு. 167

சீதமுற்ற பிற்றை தெரிந்தெடுக்க வித்ததுவும்
போத மணறன்னைப் போன்றிருக்கும்-ஓததையுங்
தம்பனத்திற் காகத் தனித்துஞ் செலுத்தலாம்
தெம்புடன்பின் சொல்வதையுந் தேர். 168

ஆனமண லோர்கூறு மம்ப ரொருகூறும்
மானின் மதத்தில் வளரரையும்-வானமருங்
குங்குமப்பூ காலுமுடன் கூட்டித்தேன் விட்டரைத்து
செங்குன்றி போன்மாத் திரை. 169

பங்கயக்கை யாலுருட்டிப் பத்திமிக வைத்துவிடு
அங்கயற்கண் ணாயொன் றருந்தியே-துங்கமுறுங்
கண்டிட்ட பாலதனைக் காய்ச்சிப் பருகிவிடில்
மண்டிரத்தச் சத்து வரும். 170

விரைந்த கலிதம் மிகுகனவி லாகிக்
கரைந்த கலிதமிவை கட்டி-வரைந்த
படிநிற்குந் தேகம் பலக்கு மிதற்கிப்
படியினிக ரொன்றுமிலை பார். 171

## 57. தாளக பற்பம்

விண்டுமனை யாட்டி விராகனிறை மூன்றெடுத்து
அண்டுகிளிஞ் சிற்சுண்ண மவ்வெடையே-கொண்டெ
ருக்கின்
வெண்ணமுதை விட்டே விளம்புமிகு சாமந்தேய்த்
தெண்ணு மறுநா ளெடுத்து. 172

சம்பீரச் சாற்றிலிரு சாமமெரித் தேவில்லை
கெம்பீர மாச்செய்து கேண்மையுடன்-வம்பான
வேப்பிலையிற் பன்னிரெண்டுமேய பலமரைத்து
மாப்பெரிய வில்லையுள்ளே வை. 173

இட்டுப் பொதிந்தங் கெழுசீலை மண்செய்தோர்
சட்டியிலே வைத்துமேற் சட்டியிட்டு-அட்டியின்றி
மேலுமைந்து சீலைசெய்து வேண்டியடுப் பேற்றிநா
னாலுகொண்ட சாமமெரி நாட்டு. 174

சொற்றகணி தப்படியே சூழ்ந்தெரிக்கத் தாளகந்தான்
பற்பமா குங்கண்டு பண்புடனே-உற்றெடுப்பாய்
குன்றியரை யாகுமுள்ளே கொள்ளு மளவிதற்கு
நன்றுடன்மேற் சொல்வதையு நாடு. 175

சாலா மிசிறித்தூ டக்ககுன்றி யெட்டுடனே
மேலாநீர் விட்டான் கிழங்கின்றூள்-தோலாத
அந்த வெடையு மருந்திருநீற் றுப்பச்சைச்
சொந்தவித்துச் சோடசமுந் தூக்கு. 176

தூக்கிக் கலந்துமுன்னே சொற்றபற்பங் கூட்டியே
நாக்கிலிட்டுத் தின்றுவிட நங்கையே-நோக்குமுயர்
இந்தியமு முண்டா மியன்மோரி லேயருந்த
முந்துபல பேதிகள்போ முன். 177

## 58. சஞ்சீவி லோக செந்தூரம்

எஃகினது துண்டை யெடுத்தே நெருப்பிலிட்டு
அஃகிடா மற்சுட் டருணத்தின்-வெஃகுபழச்
சாற்றிலிட்டு முன்போற் றழலிலிட்டு மீண்டுமங்கே
போற்றுமந்தச் சாற்றினிலே போடு. 178

இத்தகவீ ராறுமுறை ஏற்கவே செய்தெடுப்பாய்
அத்தருணங் கல்வத் ததையிட்டு-நைத்தே
பலமிரண்ட ரைப்பொடிக்குப் பன்னிருபா னான்கு
பலநெல்லிக் காய்ச்சாற்றைப் பார். 179

அச்சாற்றை விட்டே யடுத்த நிழலில்வைத்து
நிச்சயமாக் காய்ந்தபிற்றை நீயெடுத்தால்-மெச்சுமுயர்
செந்தூர மாகுந் திகழ்குன்றி யொன்றிரண்டு
நொந்தவர்க்கிங் கா நீ நுவல். 180

அளவின் படியேநல் லாமலகச் சாறுங்
களவிலாத் தேனுங் கருத்தா-யுளவகைக்கு
விள்ளு முபய விராகனெடை சேர்த்திட்டுக்
கொள்ளத்தா துண்டாகுங் கூறு. 181

சீந்திற் சருக்கரையுஞ் சீரேலச் சூரணமும்
போந்தவிரா கன்வகைக்குப் போற்றுகால்-தேர்ந்தெடு
சிக்கியசெந் தூரத்திற் சேர்த்தருந்த முப்பொழுதில்
மிக்க சுரம்போய் விடும். 182

செப்புவிரா கன்றேனிற் செந்தூரஞ் சேர்ந்தருந்த
ஒப்பில்பண்டை யாஞ்சுரமு மோடிவிடும்-இப்படியே
பாலேட்டி விட்டுண்ணப் பற்றீரற் றூர்ப்பலத்தின்
மாலோட்டி வைக்கும் வழுத்து. 183

பண்டைப் பனைவெல்லம் பற்றோர் விராகனிறை
கண்டமா வுப்பதிலே கால்சேர்த்தி-ரண்டையுமொன்
றாக்கிச்செந் தூரமமைத்தருந்த மூலத்தைப்
போக்கியுடல் காக்கும் புகுந்து. 184

## 59. வீரசூர லிங்க செந்தூரம்

திருகமைந்த மூடியொன்று சேரிருப்புச் செப்பில்
வருமிலிங்க மோர்பலத்தை மாட்டித்-திருகியுடன்
மூடிவைத்துப் பின்றேனெய் முன்னுசேங் கொட்டையிவை
நாடி வகைக்கிருபா னான்கு. 185

சேரும் பலங்கண்டு சேங்கொட்டை யைப்பொடித்து
நேருநெய்தே னிற்கலந்து நீயியம்-சீருடனே
பூசியசெப் புச்சட்டி புக்கவிட்டு முன்சிமிழை
நேசமுட னுட்செலவே நீட்டு. 186

போட்டவுடன் மேற்சட்டி பொக்கெனவே மூடியதிற்
கூட்டமுறச் சீலைகட்டிக் கூறடுப்பில்-நாற்சாமம்
இட்டுத்தீ பாக்கினியை யேற்கவெரித் தாறியபின்
பிட்டெடுசெந் தூரமாம் பின்பு. 187

சிலைக்கல்வத் திட்டுத் திகழெருக்கின் பாலை
மலைப்பின்றி விட்டு வலிகொண்-டலைத்துநாற்
சாமஞ்சென் றேவழித்துத் தக்கவில்லை யிட்டங்கு
தாமதமி லாதோட்டிற் றாக்கு. 188

ஓடுமேன் மூடி யுயரெழுமண் சீலைசுற்றி
நாடு மிருபத்து நான்குபலம்-கூடு
எருவிற் புடமிட் டெடுகா லரிசி
உருவிற் கொடுக்குமள வு. 189

பசுவினவ நீதமதன் பால்வெண்ணெய்க் குள்ளிட்
டசுபங் கெடவென் றருந்த-வசமாஞ்
சுறுசுறுப்பு வீரந் தொடர்புருஷத் தன்மை
அறுநரம்பின் புஷ்டியுமுண் டாம். 190

இம்மருந்தை யுண்ணுங்கா லேற்றபுளி பெண்டள்ளி
மம்மர் மிகவே வரும்பசிக்கு-அம்மருந்
தித்திப்பா காரஞ் சிறந்தமிட்டாய் வர்க்கங்கள்
நத்துவதே மிக்க நலம். 191

## 60. நிராசை நிவாரண தீலா

கள்ளமறு மாவிலவங் கச்சூ ரணமதனாந்
தெள்ளுபட்டைத் தூளுஞ் சிறந்தமண-முள்ளதொரு
குங்குமப்பூ வெள்ளெருக்கிற் கொள்வேர்ப் பட்டைத்தூளு
மங்காய் விராகன் வகைக்கு. 192

வேதமெனக் கொண்டு விளங்குகண்டங் கத்திரியிற்
போதவருஞ் சாற்றைப் புகழவிட்டங்-காதரவாய்
ஓரிரண்டு சாம முடனரைத்து மாத்திரைசெய்
சேரரிருண்ட கூந்தலாய் தொட்டு. 193

வேண்டியதோ ரேல்வை மிளிர்மாத் திரையொன்றை
ஈண்டுகண்டங் கத்திரிச்சாற் றிட்டிழைத்து-மாண்டவிடங்
கண்டுமேற் பூசிவரு காலையிலே வெந்நீரை
மொண்டுகழு வச்சொலுவாய் முன். 194

இவ்வாறு செய்ய வியல்பா லியத்தினிலே
ஒவ்வா தனசெய் துடன்கொண்ட- அவ்வாதம்
ஆணி னுறுப்பி லடைந்தமிகு சோர்வையெலா
நாணிடவே போக்கிவிடு நாடு. 195

## 61. நிராசை நிவாரண நெய்

மாசற்ற வானெய் வளரெருக்கின் பால்வகைக்கு
மூசுபல மொன்றெடுத்து மூட்டியே-பேசுமொரு
காமரத்தி லிட்டுக் கலந்துபால் சுண்டியபின்
ஏமமுறு நெய்யை யெடுத்து. 196

வெள்ளைக் கெவுரி விராகனெடை முக்காலை
அள்ளலுறுந்தூள் செய்ததிற்போட்டுத்-தெள்ளியதோர்
சீசாவி லூற்றிவைத்துச் செப்புகுன்றி மூன்றிரண்டு
பேசாம லேயெடுத்துப் பின். 197

கோசத்தி னுண்ணிதாக் கூறுதல நீக்கி
மாசுற்ற மற்றதல மாட்டிவிட்டு- நேசத்த
வெற்றிலையை மேலிறுக்கி மேவியநாண் மூன்றுசெய்
அற்றுவிடுங் கோணன்முத லங்கு. 198

## 62. சஞ்சீவி சூத பற்பம்

வேண்டுமள வுப்பை விரும்புமொரு சட்டியிட்டுக்
காண்டவுலை வைத்தூதிக் கட்டியபின்-ஆண்டெடுத்து
முன்னிப் பொடித்தவுடன் முப்பது விராகனெடை
மன்னு மிரதத்தை வாங்கு. 199

வாங்கித் தசமாக்கி வாகாந் துருசுபலம்
தாங்குமைந்தைக் கொண்டத் தகையாக்கி-ஆங்குவங்கம்
பற்றாத தாம்பிரத்தின் பாத்திரத்தி லுப்பின்றூள்
பொற்றா மரைக்கையினாற் போடு. 200

அங்குக் குழியொன் றமைத்திரதம் பத்திலொன்றைச்
செங்கைகொடு சேர்த்தே திகழ்துருசில்-தங்குமொன்றை
மேற்சேர்த்து முன்னே விளம்புமுப்பின் றூளையதன்
பாற்சேர்த்துப் பள்ளமொன்றைப் பண். 201

இந்த விதமா யிருந்துபத்துப் பங்கினையும்
முந்த வியற்றி முடிவிலே-அந்தவுப்பை
மூட்டிப் பொதிந்துமேல் மூடியதை யேயரைத்து
ஈட்டுகவ சங்கலத்திற் கிட்டு. 202

உத்தானத் தேற்றி யொருநாள் முழுதுநீ
அத்தானத் துற்ற வழறன்னைப்-புத்தியுடன்
கூட்டிக்கூட்டிக் கொளுத்திக் கொள்கலத்தின் மேற்புறத்தில்
நாட்டுமுவர் தோன்றமைய நாடி. 203

உடனெடுத்துப் பார்க்கி லொளியிரத பற்பந்
திடனாகிக் காணுமதிற் றேனே-எடையரிசிப்
பாதியெடுத் தாவின்வெண்ணெய் பானெயிவற் றூடுவைத்து
நீதிபெற வூட்டிவிடு நேர். 204

ஆடுநரம் பெல்லா மடல்கொண் டுடன்வலுத்து
நீடுமுறுக் கேறி நிலைபெற்றுப்-பீடுடைய
மேனி மினுமினுத்து மிக்கபல முண்டாகும்
கானிலத்தீ டில்லை நவில். 205

இம்மருந்தைப் போலவுமொன் றிப்புவியி லில்லைமின்னே
எம்மருந்து மிம்மருந்துக் கீடாகா-நம் முறைகண்
டேற்ற படிசெய் திலேகியநெய் தன்னிலிட்டால்
ஏற்றமிக வுண்டா மியம்பு. 206

ஆவலுட னான்சொல் லரிய நூல் போற்றியெல்லாங்
காவலுடன் செய்தாலே கைகூடும்-பாவ மற
நிந்திப்பார்க் கெச்செயலு நேராது மானே நீ
முந்திப்பார்த் தன்பா முயல். 207

## 63. மகாவீரிய பாலரசாமிர்தம்

பால விரதத்திற் பன்னிரு விராகனெடை
சாலவெடுத் தவ்வெடைநற் சார்ந்தவெள்ளி-தோலமுறக்
கொண்டதிலே நீசிறிதாக் கூறியதோர் மூசைசெய்து
ஒண்டரிர தத்தையுளே யூற்று. 208

செங்கலொன்றுதேடித்திகழ்மூசை கோள்ளும்வண்ண
மங்கலமாவோர்குழியை வாய்ந்தகழ்ந்து-செங்கையுறு
மூசையதிற் சேர்த்ததன்வாய் முன்னங் குலமொன்று
தேசுடனே மேற்றெரியச் செய் 209

அந்தச்செங் கல்லை யடுப்பின்மிசை வைத்திலந்தை
அந்தச் சுகவிறகிட் டாவலுடன்-முந்தியெரி
பின்மூன் றரைவீசை பேரெலுமிச் சம்பழத்தை
மன்சா றெடுத்து வடி. 210

கட்டியெடுத் தேமண் கலயத்தில் விட்டுசி
யிட்டுத் துளைகீ ழியற்றிமேற்-கட்டி
யிரதத்தொவ் வோர்துளியா யேற்றிறங்கச் செய்தே
விரவுசுறுக் கிட்டு விடு. 211

பின்புமுப்பத் தைந்துபலம் பேசு பருத்தியிலை
யின்சாற்றி லுஞ்சுறுக்கங் கேற்றுச்செய்-முன்பரத்தின்
நற்கருணை யாலேமுன் னாட்டிவைத்த மாவிரதம்
பற்பமாத் தோற்றிவிடும் பார் 212

இருகாச ளவி னெடைட சுவின் வெண்ணெய்
தருமுயர்பா லாடையிவை தன்னில்-அருமையுடன்
மானேயுட் கொள்ள வளர்கிரந்தி மேகம்போம்
தானே யிரத்தந் தரும். 213

பசியுமிக வாகும் பகரிந் திரியமாம்
கசியுந்தா தியாவுமுள்ளே கட்டாம்-நிசியிற்
கலக்கின்ற போகமாங் காணைந்தேழ் நாளில்
துலக்கமுற வீரியமாஞ் சொல்லு. 214

## 64. தாம்பிர பற்பம்

நல்லதொரு தாம்பிரத்தி னாடும் விராகனொன்றை
மெல்லியதாச் சொல்தகடா மேவவடித்-தொல்லையிலே
அக்கினியி லிட்டங் கழல்போலக் காய்ச்சியே
மிக்க மிளகாயின் வேர். 215

தந்ததொரு சாற்றிலே தானெடுத்துப் போட்டுவிடு
முந்தைப் படிநாற்பான் முன்னுமுறை-தந்திடச்செய்
கண்ணே யெடுத்துக் கருதுபதின் மூன்றுபலந்
தண்ணாவற் கொட்டையிலே தான். 216

உளபருப்பு நாமிங்கே யோதுமள வான
மிளகா யிலையுடன் வேண்டிப்-பளபளக்கும்
வெண்ணெய்போ லாட்டி விளக்குதக டுட்படுத்தி
மண்ணான்முச் சீலைதனை மாட்டு. 217

பாங்கா வுலர்த்தியிரு பத்தேழாம் வீசையிலே
தூங்கும் வறட்டிகளைச் சூட்டியே-ஓங்குகுழி
அப்புடத்திற் சேர்க்க வதிற்பற்ப மாமளவு
செப்பரிசி யொன்றிரண்டாந் தேர். 218

சோகமில்லாப் பாலாடை சொல்வெண்ணெயில் அருந்த
மேகமொடு குட்ட மிகுகிரந்தி-மாகுன்மம்
அற்றோடித் தேகபுஷ்டி யாமிந் திரியவிருத்தி
உற்றேவந் தெய்துமிதை யோர். 219

## 65. வெள்ளைப் பற்பம்

குற்றமற்ற வெள்ளை குறித்தவிரா கன்மூன்று
பெற்றிருப்புச் சட்டியிலே பேணிவைத்து-சுற்றடுப்பின்
மேல்வைத் துலந்தை விறகா லெரியெழுப்பிக்
கால்வயங்க வீரிரண்டு கண்டு. 220

நாற்றிசையு முன்னே நவிலிருப்புச் சட்டிக்கு
மேற்றிகழ நட்டே மிளிர்துணியை-ஏற்றநாற்
றம்பங் களில்விரிந்து சாரத் தொடுத்ததன்மேற்
றம்பமா நாயுருவி தான். 221

பட்டய்ந்த சாம்பல் படிகாலைப் போட்டதினீர்
விட்டுவரு வாய்சிறுக மேவுசலஞ்-சொட்டுவதும்
பாடாண மீதிற் படும்வகையே செய்துவர
ஓடாம நாழியத்திற் குள். 222

வெண்ணிறமாம் பற்பம் விளங்கு மரிசியொன்றை
வெண்ணெயிலே வைத்து விழுங்கிவிட—சன்னியா
தங்களுடன் வாயுகப சம்பந்த நோய்களுடல்
பொங்கியமே கங்களுமே போம். 223

கீல்வா யுவுடன் கிரந்திநோ யும்பட்டு
மேல்வாய்க்கு மிந்தியமு மீறுமே-மால்வாய்க்கும்
பெண்புகையு மாபுளியும் பேணாதே நீயிவையே
நண்புவியிற் பத்தியமா நாடு. 224

## 66. லோக வீரியாமிர்தம்

வேணவள வெஃகின் விளங்கு பொடிதன்னைக்
காணவே கல்வமிட்டுக் கண்மணியே-நாணமின்றி
ஐந்தரைக்கா னாழி யரைத்தப்பு விட்டுடனே
வந்தகரத் தாற்கழுவு வாய் 225

என்சொற் படியே யிருநூற் றிருபதெனும்
பன்முறை யிவ்வாறேசெய் பாவையே-முன்னெஃகுஞ்
சுத்தியதா மேயிதனைச் சூழோர் கலத்திலிட்டு
மெத்தநிறை தூளிற்கு மேல். 226

அங்குலமு நான்கா மளவிருக்க வொட்டகத்தின்
பொங்குநீ ரேனும் புகழ்ப்பசுவிற்-றங்கியநீ
ரேனும்விட்டுக் காய்ச்சி யிசைந்தநீர் வற்றியபின்
காணுதயிர் விட்டுக் கலக்கு. 227

கலந்தே நிழலில்வைத்துக் கண்மணியே யீரம்
உலர்ந்ததரு ணத்தெடுத்தங் கோட்டில்-நலம்படவே
இட்டுமேன் மூடி யியல்கவசஞ் சேர்த்துலர்த்தி
இட்டவெரு வீசையுமோ ரெட்டு. 228

எட்டிற் புடமிட் டெடுத்தந்த நற்பொடியில்
தொட்ட விராகன் றொடராறிற்-கிட்டவண்ட
மஞ்சட் கருவொன்று வாகாக் கணக்கிட்டு
மிஞ்சாமற் சொல்லுமட்டும் வேண்டு. 229

வேண்டியதில் விட்டே விளங்கவிரு சாமமரைத்
தாண்டுவில்லை செய்துலர்த்தி யப்பொழுதே-நீண்டிடுநல்
ஓட்டில்வைத்து மேன்மூடி யோர்மணங்காமே ரெருவில்
ஏற்று புடமிட் டெடு. 230

கணக்கின் படிபுடமுங் காதலுட னாற்ப
திணக்கமுறப் போட்டுவிட்டா லேதும்-பிணக்கின்றி
ஒன்றாந் தரமா யுயர்செந்தூ ரந்திகழும்
நன்றா மிருபதிலே நாடு. 231

இரண்டாந் தரமா மியம்புபதி னொன்றில்
தரந்தான்மூன் றாமேயேழ் சாமத்-திரண்டதா
நான்காகு மைந்திலே நல்லைந்து மாகுமிதை
மான்பார்வைக் கண்ணாய் மதி. 232

ஒன்றி வரிசியரை யொன்றா மிரண்டிலே
ஒன்று முதலிரண்டா மோர்மூன்றில்-ஒன்றும்
இரண்டுமுத னான்கா மியனான்கி னான்கெட்
டிருந்தவைந்தி லெட்டிரட்டி யெண். 233

பிரமாணத் தின்படியே பேசனுபா னத்திற்
றிரமாக வுண்டுவரச் செப்புஞ்-சிரமூளை
ஈர லிரைப்பை யிருதயமி வற்றைவலி
சேரவே செய்யுந் தெரி. 234

மெத்த விரத்தமிகும் விட்டதா துற்றுவரும்
அத்தாதைப் பற்றி யமர்பிணிக-ளத்தனையும்
மாளப் புரியு மருத்தினங்கட் குள்ளேகை
யாளத் தகுந்ததிதே யாம். 235

## 67. மகாவீரிய லிங்க செந்தூரம்

வீரியவி லிங்கத்தில் மேயபல மொன்றரையுஞ்
சீரியசூ தத்தின்முன்பு செப்பெடையும்-நேரியலுங்
கற்குழியி லிட்டேவெங் காயச்சாற் றைப்பிழிந்தற்
தில்சிறுக விட்டுத் தினம். 236

ஒன்றிற் கிருசாம மொப்பவரைத் திப்படியே
நன்றுடனே நாற்பதென்ற நாளரைத்து-ஒன்றுசிறு
காசளவில் வில்லைபல கண்மணியே செய்துநிழல்
மாசகல வேகாய வை. 237

சாணொன் றரையாளந் தக்கநான் கங்குலத்திற்
பூணகல முள்ளகுழி பூமியிலே-காணச்செய்
தங்கேகற் சுண்ணாம் பரையளவு போட்டமுத்தி
மங்காய்மேல் வில்லைகளை மாட்டு. 238

வில்லைமேல் முன்சுண்ண மீண்டுமுடன் போட்டமுத்தி
அல்லைநிகர் கூந்தலா யக்குழியைப்-புல்லுபுடை
சுற்றிவர நான்காகச் சொல்லங் குலமிடைவிட்
டற்றவொரு பள்ள மமை. 239

பள்ளத்தி லேவீசை பத்தொன் றெனுமெருவை
உள்ளத் துறுதியுட னோர்ந்தடுக்கிக்-கொள்ளத்தீ
நாற்றிசையு மோ மைய நாடிக் கொளுத்தியுட
னேற்றெரிந்த பின்கண டெடு. 240

ஐம்பதென்ற நாழி யள்வா மெரிவதற்கு
நம்புவாய் பின்பற்ப நண்ணுமதில்-பின்பரிசி
ஒன்றிரண்டை நல்லகருப் புற்ற கடுக்காய்த்தோல்
மன்றன்மிகு மாவாது மை. 241

காணும் பிசின்காச்சுக் கட்டி மருதாணி
பூணுங்கை யாந்தகரை போற்றியே-பேணுந்
துராலெபையி வற்றைத் தொடுத்தேனு மன்றித்
தராதரங்கள் கண்டே தனி. 242

ஆக்கியெனினு மடுத்துக் கஷாயமிட்டுச்
சீக்கிரத்திற் கூட்டியிடச் சேர்கிரந்தி-தாக்குகுட்டம்
ஓடிவிடு மானே யுடலிற் பலசுகங்கள்
கூடிவிடு நீயறிந்து கொள். 243

பச்சையிலைச் சாறெனினும் பற்றுமதன் வித்தூற
இச்சையுடன் வந்தநீ ரேனுமிக-மெச்சும்விரா
கன்மூன்றுஞ் சீனியொன்றுங் காதலுடனே கலந்து
முன்றோன்று பற்பமதின் மூட்டு. 244

மூட்டியுணச் சூட்டால் முயங்கிய நோ யத்தனையுஞ்
சேட்டைவிட்டு நீங்குந் தெளிவையே-பீட்டிலவங்
கச்சூ ரணம்விரா கன்னொன் றரைதேனில்
மெச்சவொன்றுஞ் சேர்த்துயர்வா விள். 245

மாமருந்தைக் கூட்டியுண மானிடர்க்குச் சீதளத்தால்
ஆமருநோய் பீனிசங்க ளற்றோடும்-தோமதிலா
தாதுபுஷ்டி போகசக்தி தம்பனமு முண்டாகுந்
தீதுசற்று மில்லையெனச் செப்பு. 246

பிணிகட்குத் தக்கதாப் பேசுமனு பானந்
துணிவுடன்சேர்த் திம்மருந்தைத் துய்த்தால்-மணிலதிக
நோய்போகு மிங்கு நுவல்வனவற் றுள்ளிதுவுந்
தாய்போன்ற தாமறிந்து சாற்று. 247

## 68. அப்பிரக பற்பம்

கிருட்டிணவப் பிரேகக் கிளருநவ நீதம்
தெருட்டுபல நான்குகல்வஞ் சேர்த்தே-வருத்தமின்றிக்
கோமயத்தை விட்டே குறிப்பாக வொன்றென்ற
சாமமரைத்து வில்லையொன்று தட்டு. 248

தட்டிப்பாண்டத்தோட்டிற்றாக்கியைந்து சீலைசெய்தே
எட்டென்ற வீசை யெருப்புடத்தை-யிட்டெடுத்துப்
பண்டைப் படியேழு பற்றிச்செய் தேகுமரி
கொண்டசாற் றின்மூன்று கொள். 249

கையாந் தகரையிலைக் கான்சாற்றில் முப்புடமும்
ஐயாங்கள் ளிப்பாலி லவ்வாறும்-மெய்யாக
ஆற்றி முடித்தாலவ் வப்பிரே கப்பற்பந்
தோற்றிவிடு மீரரிசிசூழ்ந்து. 250

தோற்றரிசித் திப்பிலியின் சூரணம் விராகனெடை
சாற்றொன் றரைதேனுந் தானொன்று-போற்றியதை
காட்டிக் கொடுக்கக் கபசுரமு மக்கபத்தைக்
கூட்டுபிணி யாவும்போங் கூறு. 251

சீந்திற் சருக்கரையிற் சேரரைவி ராகனுடன்
போந்தபசு நெய்யும் புகவெடைசேர்த்-சோர்த்தபற்பம்
உள்ளிட்டருந்த வொடுங்கும் பிரமியங்கள்
உள்ளதிது கண்டிங் குணர். 252

மஞ்சட் கடுக்காய்த்தோல் வைத்திடித்த சூரணமும்
மிஞ்சேலத் தூளும் விராகனரை-கொஞ்சு கண்டுத்
தூளொன்றுங் கூட்டித் தொடர்மருந்தைவைத்தருந்தக்
கேளிரத்த தோடமெலாங் கெட்டு. 253

நல்லிரத்த மூண்டாந்தே னாடும் விராகனொன்றில்
புல்லவைத்துட் கொண்டு புகல்கண்டு-மெல்லவிட்ட
வெப்பப்பா லைப்பருக மேயகிழத் தன்மைபோம்
அப்பப்பா தேகதிட மாம். 254

தனித்தேன் விராகனொன்றிற் றானருந்த மூலம்
சினுக்கிரும லப்பொழுதே தீரும்- கணிக்குநெல்லி
வற்றல்தான் றிக்காய்ந்தோன்மஞ்சட் கடுக்காய்த்தோல்
சொற்றவகைக் குப்பலந்தான் றூக்கு. 255

பெண்ணே யரையாம்பிறங்குமீதி னீர்வார்த்து
எண் ணுகின்ற மூன்றிலொன்றா யேற்றுவற்ற-ஒண்ணி
அதிலனுபா னித்தருந்த வம்பகத்தைச் சார்ந்த
மதிமயக்க மோடும் வழுத்து. 256

## 69. வெள்வங்க பற்பம்

ஏற்றசுத்த வெள்வங்க மேழரை விராகனிறை
மாற்றமிலாச் சூதம் வழுத்ததுபோல்-சாற்றும்வெடி
யுப்பிருபா னான்கிங் குடனெடுத்து முன்னிரண்டும்
செப்புகல்வத் தாகவைத்துத் தேய். 257

தேய்த்துவெடி யுப்பையும்பின் சேர்த்திரண்டு சாமம்
-சாய்த்தரைத்து மட்கலசங் தன்னிலிட்டு-வாய்த்தகலை
ஏழுசுற்றி மூடி யிரண்டிரட்டி வீசையெருச்
சூழுபுட மிட்டுத் தொடு. 258

தொட்டெடுக்கப் பற்பந் துலங்குமதைச் சுத்தநீ
ரிட்டரைத்து வைத்துப்பின் னேற்றதெளி-வைக்கழிப்பாய்
அவ்வாறே செய்துப் பகன்றபின்பு பானுமுன்னே
செவ்வாயி னாயதையுஞ் சேர். 259

பின்னேயெடுத்ததனிற் பேணுகுன்றியொன்றிரண்டை
உன்னேர்நெய் வெண்ணெய்தே னொன்றில்வைத்து-
மின்னே
ரிடையா யருந்த வியல்தாது முண்டாந்
தடையேது மில்லையெனச் சாற்று. 260

மேகக் குழலாய் விளம்புஞ் சிராவகம்போம்
மேகம்போம் பாண்டு விரைந்துசெலும்-தேகபல
மாகுந் தகுந்த வனுபானத் திட்டருந்தச்
சாகும் பலபிணிக டாம். 261

## 70. சுவர்ண அப்பிரேகம்

சுத்தித்த வெள்வங்கஞ் சொல்லிரா கன்னவமாம்
அத்தகைய சூதத்தி வாறாக-வச்சாரம்
பத்தைந்து வெண்காரம் பற்றுமொன்ப தாங்கெந்த
கத்திலந் தக்கணக்கே காண். 262

சொற்றவங்கஞ் சூதத்தைத் தொந்தித்தரைத்துப்பின்
மற்றவையுஞ் சேர்த்திரண்டா வாய்சாமம்-உற்றரைத்து
அஞ்சனம்போ லானபின்பங் கைந்து பலமாகுந்
தஞ்ச மருதாணிச் சாறு. 263

சிறுகச் சிறுகவிட்டுச் செல்லுமட்டு மாட்டிக்
குறுக வுலர்த்தியழல் கொண்டும்-அறுபடாச்
சீலைசெய்த சீசாவிற் சேரவைத்து மூடாமல்
மாலாங் கரிநெருப்பில் வை. 264

வைத்தெரித்து நல்லயத்தில் வாய்த்தகம்பி யொன்றாலே
ஒத்துத் துழாவிமருந் தோரவே-நற்சிவப்புக்
கொண்டபதம் பார்த்துக் குளிரவைத்துப் பின்பெடுத்துக்
குன்றியெடை யுண்ணத் குறி. 265

மற்றுமொரு மார்க்கம் வழுத்துவன்கேள் சட்டியிலே
உற்றதுவா ரஞ்செய் துயர்சீசா-சட்டியின்கீழ்
நான்கங் குலந்தோற்ற நாட்டியடுப் பிட்டெரித்தும்
தேன்மொழியே கொள்ளலாந் தேர். 266

விள்ளுகணக் கின்படிநெய் வெண்ணெயிலுட் கொள்ளவே
கொள்ளைச் சிராவகம்போங் கோக்கருவி-வல்லபமாம்
தாதும் பலக்குந் தகுந்தநங்கை மேகம்போம்
ஓதிவைப்பை யின்பிணிசா மோர். 267

## 71. வெள்வங்க பற்பம்

செவ்விதாம் வெள்வங்கஞ் செப்பும் பலமிரண்டு
சவ்வகன்ற லண்டத்தோ றானதுவாம்-இவ்வதனைக்
கல்வத்திட் டுப்பொடித்துக் காணுகரும் பொற்கலத்தில்
வெள்வங்கம் போட்டடுப்பின் மீது. 268

ஏற்றித் தழலிட் டெரித்தண்டத் தூள்சிறுகப்
போட்டுத்தே ய்ப் பாய்கரிய பொற்றுடுப்பால்-சாற்றுதூள்
சென்றபின்பு நீபார்க்கச் சேர்ந்தவங்கம் பற்பமாம்
ஒன்றுகருப் பாயிருக்கு மோர். 269

மீண்டுங்கல் வத்திலிட்டு மெச்சுகும ரிச்சாற்றிற்
பூண்டநாற் சாமம் புகழ்ந்தரைத்து-வேண்டும்வில்லை
ஆக்கி யுலர்த்தி யழகுபெற வோட்டிலிட்டுப்
போக்கில் கவசம் புரி. 270

பகர்ந்தகவ சத்தைப் பன்னிரண்டுவீசை
யுகந்த வறட்டியிற்காற் றோட-நிகழ்ந்தபுடம்
போட்டெடுக்கவாணரத்தைப் போன்ற நிறப்பற்பமாம்
ஊட்டளவு குன்றியரை யொன்று. 271

சாற்றுசுக நீர்ப்பெருக்குந் தாதின் சிராவகமும்
தோற்றியநீர்ப் பையினது துர்ப்பலமும்-கேட்டையுறும்
தேகபலந் தாதுபுஷ்டி சேருமொரு தீங்கிலையென்
வாகடத்தி லேயுறுதி வை. 272

## 72. இலகு பாஷாண பற்பம்

குற்றமற்ற வெள்ளை குறித்தபல மொன்றெடுத்து
வற்றுந் திருகுகள்ளி வண்சாம்பல்-உற்ற
விருபான் பலத்தை யெடுத்தோர் கலத்தில்
அரைவாசி போட்டதன்மீ தங்கு. 273

நாட்டியதன் மேலு நவில்சாம்பர் பாதியிட்டுக்
கூட்டி யமுத்திவாய்க் குச்சிலிட்டே-ஈட்டுமைந்து
மண்சீலை செய்தே வளர்கலச முற்றிலுமே.
பின்சீலை யைந்தையிட்டுப் பேண். 274

பேணி யுலர்த்தியே பின்மூன் றரைவீசை
காணும் வறட்டியிட்டுக் கண்மணியே-பூணுபுடம்
ஆற்றியெடுக் கப்பற்ப மாகு மரிசியெடை
யற்று திராக்கக்கனி பா லேடு. 275

வெண்ணெயிலே யுண்ண மிகுகிரந்தி குட்டமுடல்
மன்னுகுளிர்ச் சம்பந்த வன்பிணிகள்-விண்ணிலுறும்
தம்பனமு முண்டாந் ததுபோக சத்தியாம்
தம்பமிது மானிடர்க்குச் சாற்று. 276

மானேநீ யிந்த மருந்துண்ணும் போதிலே
ஆனே தருநெய் யதிகஞ்சேர்-வீணாம்
புளிப்பறவே நீக்கிப் புசிப்பாய்நான் சொல்லு
மொழிப்படியே செய்வதற்கு முன். 277

## 73. தார பற்பம்

விண்டு மனைவி விராகனறு நான்கெடுத்துப்
பொன்றாக்கல் வத்திற் பொடியாக்கி-துன்றெருக்கின்
பானாற்பத் தெட்டுப் பலத்றைச் சிறுத்துவிட்டு
ஆனாம லுற்றங் கரை. 278

ஆனபின்பு கள்ளிப்பா லவ்வெடையை யப்படியே
மானவிட்டங் காட்டிப்பின் மாவபினி-
னொன்றாம் விராகனெடை யோதுபலம்பன்னிரண்டா
விண்டசலத் திற்கரைத்து மேல். 279

வடிகட் டினநீரை வாகுபெற வார்த்துத்
துடியிடையா யாட்டிப்பின் சொல்லுங்-கொடிய பச்சை
கஞ்சா விலைச்சாறு காண்பலமா றெட்டேனும்
துஞ்சாப் பலமிருபது. 280

காய்ந்தகஞ்சர்வோர் படியாங் கம்மிற்போட்டுக் காய்ச்சி
வாய்ந்த வரைப்படியா வற்றவைத்துங்-கேய்ந்துவடி
கட்டி யிறுத்த கஷாய மெனினுமதில்
விட்டரைத்துத் தட்டுவில்லை மெச்சு 281

சூரியன் முன்வைத்துலர்த்திச் சொல்லுமண முருக்கை
நேரியலுஞ் சாம்பர் பல நீண்டுமுப்பான்-வாரியதில்
கிட்டியத் தாம்பரத்தின் கிண்ணியிலே பாதியிட்டுத்
தட்டியநல் வில்லைகளைத் தாக்கு. 282

மேலே மறுபாதி விள்ளுசாம் பற்கொட்டி
வேலேய் விழியாய் மிகவழுத்திச்-சீலையேழ்
முன்னிச்செய் தேகலத்தின் முற்றிலுமச் சீலைசுற்றி
அண்ணலடுப் பேற்றிப்பத் தாறு. 283

சாமமெரித் தாறியபின் றானெடுக்கப் பற்பமாம்
தூமமுறு மக்கினியிற் சொல்லுமதை-நேமமுடன்
காட்டுவாய் தூமமங்கே கண்டால் மறுபடியுஞ்
சுட்டந்தச் சாம்பற்கு ளெட்டு. 284

எனப்பகருஞ் சாம மெரித்தெடுக்க வோடாக்
கணக்குடைய பற்பமாங் காண்பாய்-மணக்குமிதில்
சொல்லு மரிசியரை தோற்றொன் றனுபானத்
துள்ளிட் டருந்திவிட வோர். 285

குட்டங் கிரந்தி குறைக்குங்கீல் வாயுபுண்கள்
கட்டிமூ லம்படைகள் காணாவே-கெட்ட
சிராவகம்போங் காசம்போந் தீரா விருமல்
தராதலத்தி லோடிவிடுந் தான். 286

எல்லாச் சுரங்களும்போ மிந்தியமுந் தம்பனமாம்
நல்லாய்கேள் போகசத்தி நாடுமே-பொல்லா
அடற்பிணிகட் கேற்ற வனுபானத் துண்ண
மடப்பிணிய நேகம்போ மாண்டு. 287

மெல்லியே யெல்லா வியாதிகட்கு மீதாகும்
சொல்லின் படியிதனைச் சூழ்ந்துசெய்தால்-எல்லாமுன்
கைகூடுங் கட்டங் கருதிவிட்டாற் றுன்பங்கள்
மெய்யாக வந்து விடும். 288

## 74. வெள்ளிப் பற்பம்

வெள்ளியிலே மூன்று விராக னெடையெடுத்து
ஒள்ளியதோர் நற்றகட்டை யுண்டாக்கி-விள்ளுமரி
தாரத்தி லாறாகச் சாற்றும் விராகனிறை
ஆரத்தண் ணீர்வார்த் தரை. 289

ஆட்டிவெண்ணெய் போலெடுத்தே யத்தகட்டின்மேற்கவசம்
மாட்டி யுலர்த்தி வரையோட்டில்-போட்டோட்டின்
மூடியெழு சீலை முடிவாகச் செய்துலர்த்தித்
தேடியெட்டு வீசையெருச் சேர். 290

சேர்த்த வெருவிற் றிகழ்புடத்தை யிட்டெடுத்துப்
பார்த்தவுடன் பற்பம் பளபளக்கும்-நேர்த்தியுடன்
குன்றியொன்றை வெண்ணெய் குறிக்குமிலே கியத்தில்
ஒன்றவைத்துப் பத்தி யுடன். 291

உட்கொள்ளத் தாதுநட்ட மோடிவிடும் வீரியமாங்
கட்கொள் மலர்க்குழலாய் காசினியில்-உட்கவரு
மார்பதிர்ச்சி தீர்ந்து வளர்காத் திரபலமும்
ஏர்மலிவு மிக்கவுண்டா மே. 292

## 75. வெள்ளிப்பற்பம் (வேறு)

வெண்காரஞ் சாரம் விளம்பு படிக்காரம்
கண்பார்க்கும் வெள்ளை கறியுப்பு-பெண்பாவாய்
மேய வகைக்கு விராகனிறை மூன்றெடுத்தங்
காயகல்வத் தோர்சாம மாட்டு. 293

பார்த்தாட்டிப் பாகப் படிபதங்கித் தீதிலரை
சேர்த்த விராகனெடை தேர்த்தெடுத்து-சீர்த்தவுமி
நீராற் குழைத்து நிகழ்ந்துவிரா கன்மூன்றா
ஆரான வெள்ளியிலே யப்பு. 294

அப்பியுலர்த்தி யகலிலிட்டு மேன்மூடி
ஒப்பிமண்சீ லைசெய் துலர்த்தியே-செப்பிடுமவ்
வீசை வறட்டியிலே மிஞ்சுபுட மிட்டெடுக்க
ஆசைமிகும் வெள்ளிபற்ப மாம். 295

பக்குவக்கே டாலொன்றிற் பற்பம்வரா விட்டானீ
அக்கணத்தே வேறுபுட மாற்றிவிடு-தக்கபற்பங்
கைகூடு மூட்டளவு காணரிசி யொன்றுமுதற்
பையவே நான்காகும் பார். 296

வெண்ணெய்தண் ணீரிலே மேவவைத்துட் கொண்டாலென்
கண்ணே யிராச கருவிகளைத்-திண்ணமுறச்
செய்யுமே தாதுமிகுந் தேகபுஷ்டி யுண்டாகும்
மெய்யிற் றைரியமாம் விள். 297

## 76. இலிங்க செந்தூரம்

முக்கால் விராகன்பின் முன்னுநீர் விட்டரைத்து
முக்கிய விராகனிறை மூன்றான-தக்ககட்டாம்
நற்சிவத்திற் பூசியதை நண்பா யுலர்த்திவிட்டுப்
பிற்புகலு மார்க்கமதைப் பேண். 298

சேங்கொட்டை நெய்தேன் சிறந்தவகைக் காறுபலம்
பாங்கா யெடுத்திருப்புப் பாத்திரத்தில்-நீங்காத
நெய்தேனை விட்டு நிகழ்த்தியசேங் கொட்டைதட்டி
நொய்தாக்கிப் போட்டு நுவல். 299

கட்டிதனை நாப்பண் கனக்கவைத்துத் தீயடுப்பி
லிட்டெரித்து நீரெல்லா மிற்றபின்பு-கட்டி
பிடித்தெரியு மாங்கே பிறங்குநெருப் பாறி
விடுத்தவுடன் நீயதனை வேண்டு. 300

மேவி யெடுத்து மி.வே பொடித்துச்சீ
சாவிலே வைத்துப்பின் சார்ந்தவர்க்கு-நீவிரைவாய்
குன்றிமணி யொன்றைக் குறித்ததிராக் கப்பழமா
நன்றாகும் வெற்றிலையி னாட்டு. 301

நாட்டியிந்த நன்மருந்தை நாற்பதுநா ளூட்டுவிக்க
வாட்டமிலாத் தாது வளருமே-கூட்டுமுயர்
போகசத்தி தம்பனங்கள் பொன்றாதுண் டாகியே
தேகசத்தி நீண்டுவருந் தேர். 302

## 77. கிருஷ்ண அப்பிரேக செந்தூரம்

துங்கக் கிருட்டிணமாச் சொல்லப்பி ரேகத்திற்
றங்கப் பலமாறு தான்பொடித்துப்-பொங்கும்
இருபத்து நான்குபல மென்னெருமைப் பாலில்
ஒருசாமம் போட்டங் குடன். 303

எடுத்தவ் வளவா வியல்வேறு பாலுட்
படுத்தியட்டு மூன்றுகொதி பார்த்து-விடுத்தெடுத்து
முன்பாலிற் போட்டு முடுகிக்கை யாற்பிசைந்து
மன்பத்து நாழிமட்டும் வை. 304

நாழிகைக்கொவ் வோர்முறையு நண்ணிப் பிசைந்தெடுத்தப்
பாழியுறும் பாலெல்லாம் பற்றவிட்டு-பூழி
எனவரைத்து முன்பா விருபத்து நான்கா
மனுபலத்தி லேயூற வை. 305

வைத்தெடுத்து முன்போல் வளர்பாலை விட்டட்டு
விட்டபா றன்னை விடுத்தூற-வைத்தபால்
தன்னைவிட்டுச் செல்லுமட்டுந் தானரைத்து நீயெடுத்து
முன்னைப்போற் செய்ய முயல். 306

இந்த விதமாக வேழுமுறை செய்துவில்லை
நிந்தையற வாற்றி நிழலுலர்த்தி-முந்துமகல்
இட்டுமேல் மூடி யேழுசீலை செய்துலர்த்திப்
பத்துவீ சையெருவைப் பற்று. 307

பற்றிப் புடமிட்டுப் பாங்கா யெடுத்துவெண்மை
சுற்றுவெங்கா யச்சாற்றைச் சூழவிட்டு-சொற்றநாற்
சாம மரைத்துமுன்போற் சார்ந்தபுட மேழிட்டுக்
காமரெலு மிச்சங் கனி. 308

சாறுபல மேழெடுத்துச் சாற்றுமதிற் செல்லுமட்டும்
மீறுறா மற்சிறுக விட்டரைத்துக்-கூறுபுடம்
முன்போலொன் றிட்டு முடுகி யெடுத்ததிலே
மின்சாறா யத்தை விடு. 309

மேற்பலமே விட்டரைத்து மேவுமொரு வில்லைசெய்து
ஏற்க வுலர்த்தியோட் டிட்டுமேற்-காக்கவொரு
நல்லோட்டான் மூடி நலமாக் கவசித்துப்
புல்லுபத்து வீசையெருப் போட்டு. 310

மேவுபுட மிட்டெடுத்து மெல்லியதோர் வத்திரத்தில்
தாவுந் தளர்ச்சியாத் தான்முடிந்து-கோவுறநற்
சீசாவிற் குட்செலுத்தித் தேனேநீ வைத்துவிட்டுக்
கூசாதோர் பாத்திரத்தைக் கொள். 311

பாத்திரத்தி னன்னெய் பலமாறு விட்டுமுள்ளைக்
கோத்தவூ மத்தங்காய் கூறிரண்டு-ஏற்றகுங்கு
மப்பூவி ராகன் வளரொன் றரைதாளி
சப்பத் திரியைங்கா றான். 312

கூட்டி யிடித்துக் குறித்தவந்த நெய்யிலிட்டு
நாட்டிக் கலக்கிநீர் நண்ணைந்தாச்-சாற்றுபடி
விட்டுக் கலக்கியதில் மேவியசீ சாநாலக்
கட்டி விடுவாய் கதித்து. 313

நாலுஞ்சீ சாநீரின் நான்கங் குலத்திற்கு
மேலமையச் செய்து மிகுகலத்தின்-பாலுற்ற
வாய்மூடிச் சீலைசுற்றி வட்ட வடுப்பேற்றிக்
காய்தீ சிறுத்தெரியக் காட்டு. 314

சொன்ன படியெரித்துச் சூழ்ந்தசலஞ் சுண்டியே
பின்னுஞ் சிறிதிருக்கும் பெற்றிகண்டு-மன்னி
எடுத்தாற்றிப் பார்க்க வியலுகருஞ் சாயல்
தொடுத்தசெந்தூ ரமிருக்குஞ் சூழ்ந்து. 315

குன்றியரை யொன்றிதிலே கொண்டு தகுந்தநலம்
ஒன்றுமனு பானங்கட் குட்படுத்தித்-தின்னுடனே
கற்கண்டைக் கூட்டிமிகக் காய்ச்சியதோர் பால்பருகச்
சொற்படிநாற் பான்றினத்திற் சோர். 316

இந்தியமுங் கட்டி யிசைந்தவிளை வாகுமுடன்
தம்பனஞ்சேர் போகசத்தி சார்ந்திடுமே-முந்துந்
துரிதக் கலிதம்போந் துன்பத்திற்கு கஞ்சா
உரிமை பெறவிதைச்செய் தும். 317

மகாவீரியச் சிந்தாமணி வெண்பா முற்றிற்று.

பிஸ்மில்லாஹி

# மகாவீரியச் சிந்தாமணி

## விளக்கச் சுருக்கம்

சகோதரர்களே! மேற்படி நாமம்பூண்ட இப்பொழிப்பை இதனுடன் எழுத நேரிட்ட காரணமாவது:-

இதுவரையில் அச்சில் வெளிவராத இந்நூதன கிரந்தத்தில் அநேக அருமையான முறைகள் அடங்கியிருக்கின்றன. இம்முறைகளெல்லாம் நமது பரம்பரையில் வெகு காலமாகப் பலரால்கையாளப்பட்டுச் சித்திபெற்ற முறைகள். ஆனால், இம்முறைகளையெல்லாம் நமது பரம்பரைக்குள் ஒவ்வொருவரும் மறைவாகவும் இரகசியமாகவும் வைத்து வந்தார்கள் சில சமயங்களில் தகப்பன் தன் பிள்ளைக்கு மறைத்துவைத்தும், சகோதரர்கள் தமக்குள் ஒவ்வொருவரும் மற்றொவ்வொருவருக்கும் மறைத்தும் வந்தார்கள். ஆனால்,ஜீவகாருண்ணியமும், பரோபகாரமும், சுதேசாபிமானமும் உள்ள அநேக கனவான்களும் நண்பர்களும் இத்தகைய கிரந்தங்களைக் கற்றோர் மற்றோர் முதலிய யாவரும் எளிதில் உணரும்படி எளிய தமிழ் வசன ரூபமாகக் கருத்துரையாயியற்றி வெளிப்படுத்த வேண்டுமென நம்மைப் பன்முறையும் வற்புறுத்தி வருகின்றபடியாலும், நமக்கு அவ்வித நோக்கம் எப்போதும் நம் மனதிற் குடிகொண்டிருப்பதாலும், அரிய கிரந்தங்களை மேற்கண்டபடி வெளிப்படுத்தப் போதுமான சக்தி அடியேனிடத்தி லில்லாவிடினும் நமது பரம்பரையிலுள்ளவர்களெல்லாம் வைத்தியத்திற்றேர்ச்சியுள்ளவர்களா யிருந்து வழிவழியே சொல்லிவந்த கிரமப்படி அடியேனுக்குஞ் சொல்லி வைக்கப்பட்டுப் பழக்கமும் அனுபவமுமுடையவனா யிருப்பதாலும், கடவுள்

கிருபையாலும், பெரியோர்களின் ஆசீர்வாதத்தாலும், பற்பல பண்டித சிரோமணிகளின் உதவியாலும் லோ கோபகார மாக நம்மால் வெளிப்படுத்தப்பட்ட இந்துயூநானி வைத்திய பற்பல நூல்கள் பலராலும் நன்கு மதிக்கப்பட்டு பலரும் நம்மைப் பலவிதத்திலும் ஆதரித்துக் கனப்படுத்தி வருவதை நாம் மனதார அறிந்துள்ளோமாகையாலும்.

அவ்வூக்கத்தைக் கொண்டே இம்மாதிரி, மகாவீரியசிந் தாமணி யென்னுங் கிரந்தத்தையும் வெளிப்படுத்தத் துணிந் தோம். இவ்வரிய கிரந்தத்தில் வைத்திய சாஸ்திரங்களிற் றேர்ந்தெடுத்துப் பல தடவைகள் அனுகி சித்தி பெற்ற பல வகை அரிய முறைகள் அடங்கி இருக்கின்றன. அவை பெரும் பான்மையும் தாதுவிருத்திக்கு உபயோகமாம் மகா மேலான முறைகளாம். வீண்டம்ப விளம்பரங்களில் வெகுவாய் விரித்துச் சொல்லும் தாதுவிருத்தி ஔஷதங்களை வாங்கி உபயோகித்து ஏமாந்திருப்பவர்கள் அநேகரென்பது நமக்கு வர்ணித்த கடிதங்களாலும் நேர்நேராகவும் அறிந்து வருகின் றோம். அவ்விதம் மோசம் போகாமல் தாம் தாமே செய்து அனுபவிக்க ஏதுவாகும்படி இக்கிரந்தத்தை வெளிப்படுத்த முன் வந்தோம். ஆனால், இம்முறைகளெல்லாம் சுவை மிகுந்த பாற்கடலை கடைந்து அமுதத்தைத் தேர்ந் தெடுத்துக்கொண்டது போல் அநேக சாஸ்திரங்களிலுள்ள பல முறைகளையுஞ் சேர்த்து வெண்பாவாகப் பாடப்பட்டி ருக்கின்றன. இப்பாடல்களின் கருத்தையும் அம்முறைகளின் செய்பாக முதலியவைகளையும் அனுபவசாலிகளான கல்வி மான்கள் மாத்திரம் தெரிந்து செய்து அனுபவிக்கக்கூடுமே யொழிய ஏனையோர்களுக்கதிகம் பிரயோசனப்படா? ஆகையால் செய்யுட்களில் அடங்கியுள்ள அம்முறைகளை யாவருமெளிதிலுணர்ந்து கொள்ளுமாறு எளிய தமிழ் வசன நடை ரூபமாக எழுதியுஞ் சேர்த்திருக்கின்றோம். அம்முறை களின் சிறப்பையும் மேன்மையையும் இங்கெழுதுவதானால் இச்சிறிய கிரந்தம் அதிக விரிவெய்துமென அஞ்சி அவற்றை இங்கு நீக்கி அவற்றின் செய்பாகம் முதலியவைகளை வகை விபரமாக வெழுதியிருக்கின்றோம். அவரவர்கள் தாம் தாமே

செய்து அவற்றின் பிரயோசனங்களை அனுபவசித்தமாகத் தெரிந்து கொள்ளும்போது அவற்றின் அருமை பெருமைகளெல்லாம் தாமே விளங்கிப்போம்.

இக்கிரந்தத்தைப் பழைய காலத்து ஏட்டுப்பிரதிகளிலிருந்து ஆராய்ந்தெடுத்து இதனைச் சுத்தப்படுத்தியெழுதி இந்த ரூபமாகக்கொண்டு வந்ததினாலுண்டான தேகசிரமம் மனோசிரமம் முதலியவைகள் அனுபவசாலிகளான அன்பருக்கு இத்தன்மையன வென்பது ஒருவரெடுத்துக் காட்டாமலே தாமே நன்கு விளங்கும்.

மேற்கண்ட காரணத்தாலும் மனுஷ சுபாவத் தவறுதலாலும் இவற்றுள் ஏதேனுஞ் சில தோஷங்கள் ஏற்பட்டிருந்தால், கற்றறிந்த கனவான்களும் மற்ற அனுபவசாலிகளான பண்டிதர்களும் தயவுடன் அடியேனை மன்னித்து அவைகள் இத்தன்மைத்தெனவுடன் தெரிவிப்பார்களேயானால், அவை உத்தமமானவையாயின் அந்தப்படியே மறுப்பதிப்பில் அச்சிட்டு வெளிப்படுத்துவதோடு அவர்கள் பேரையும் பிரசுரித்து அவர்களுக்கு மிகுந்த நன்றி செலுத்த நாம் கடமைப்பட்டிருக்கின்றோம்.

ஆகையால், சுதேசாபி மானமுள்ள கனவான்களும் மற்றவர்களும் அடியேனாலியற்றப் பட்டவைகளும் வெளிப்படுத்தப்பட்டவைகளுமான யூநானி வைத்திய தாதுவிருத்தி போதினி முதலான பல கிரந்தங்களையும் மனப்பூர்வமாக அங்கீகரித்து அடியேனைப் பலவிதத்திலுங் கனப்படுத்தி வருவதைப்போல் இக்கிரந்தத்தையும் இனி அச்சிடப்படும் கிரந்தங்களையும் அங்கீகரித்துக் கைக்கொண்டு ஆதரித்து வரும்படியாகக் கேட்டுக் கொள்கின்றேன்.

இக்கிரந்தத்தாலுண்டாகும் பிரயோசனமாவது பல சாஸ்திரப்பழக்கமும் வெகுநாள் அனுபவமுமுள்ள ஒருவல்ல பண்டிதர் சமீபத்திலிருந்து உற்ற சமயத்திலூன்றுகோல் போலாகித் தக்க சமயத்தில் தம்முடைய தந்திரோபாயச் சிகிச்சைகளைச் செய்து உதவி செய்வதுபோல இக்கிரந்-

